# தொல்காப்பிய உத்திகள்

முனைவர் தி. அமுதன்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை, மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை – 600 113

தமிழ் ஆர்வலர் சீ.மா. துரையரசு அறக்கட்டளைச் சொற்பொழிவு
(அறக்கட்டளை நிறுவியோர் : சீ.மா. துரையரசு)

வரிசை எண் : 3 நாள் 14.2.2014

---

## நூல் விவரக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | **தொல்காப்பிய உத்திகள்** |
| ஆசிரியர் | : | முனைவர் தி. அமுதன்<br>உதவிப் பேராசிரியர்<br>பெருந்தலைவர் காமராசர் அரசுக் கலைக்கல்லூரி<br>புதுச்சேரி |
| பொதுப் பதிப்பாசிரியர் | : | முனைவர் து. ஜானகி<br>உதவிப் பேராசிரியர்<br>அயல்நாட்டுத் தமிழர் புலம்<br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>தரமணி, சென்னை 600 113 |
| வெளியீட்டாளரும் பதிப்பு உரிமையும் | : | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>இரண்டாம் முதன்மைச் சாலை<br>மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்<br>தரமணி, சென்னை 600 113<br>தொலைபேசி எண் 044/22542992 |
| வெளியீட்டு எண் | : | 763 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதற்பதிப்பு |
| பதிப்பு ஆண்டு | : | 2014 |
| பயன்படுத்திய தாள் | : | 18.6 கிகி டி.என்.பி.எல் வெள்ளை மேப்லித்தோ |
| நூலின் அளவு | : | 1/8 டெம்மி |
| எழுத்தின் அளவு | : | 10 புள்ளி |
| பக்க எண்ணிக்கை | : | 8+112 |
| அச்சுப்படிகளின் எண்ணிக்கை | : | 1200 |
| விலை | : | ரூ. 60/– (ரூபாய் அறுபது மட்டும்) |
| அச்சகம் | : | ஸ்ரீ சரவணா அச்சகம்<br>148, தம்புத் தெரு<br>சென்னை 600 001. பேசி: 94442 65471 |
| பாடம் | : | தமிழ் இலக்கண ஆய்வு |


---

முனைவர் கோ. விசயராகவன் எம்.ஏ.,எம்.ஃபில்,பி.எட்.,பிஎச்.டி.
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை 600 113

## அணிந்துரை

உலகில் தோன்றிய மொழிகளுக்கு முதன்மையாக விளங்குவது தமிழ் மொழி. தனக்கென இலக்கண இலக்கியப் பாரம்பரியங்களை உருவாக்கிப் பிற மொழிகளினின்று தனித்து விளங்குவதுவே அதன் பெருமையாகும். நமக்குக் கிடைத்துள்ள இலக்கண நூலாகிய தொல்காப்பியத்தின் காலம் கி.மு. ஐந்தாம் நூற்றாண்டிற்கும் கி.மு. மூன்றாம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலமாகக் கருதப்பட்டாலும், தொல்காப்பியர் காலத்திற்கு முன்பு அகத்திய முனிவரால் எழுதப்பட்ட அகத்தியம் எனும் இலக்கண நூல் இருந்தமை பிற்கால இலக்கண இலக்கிய ஆசிரியர்களின் நூற்கள் வழியாக அறியமுடிகிறது.

தொல்காப்பியர் தம்முடைய இலக்கணச் சூத்திரங்களில் என்ப, என்மனார், என்மனார் புலவர் போன்ற சொற்களைப் பயன்படுத்துவதன் மூலம் அவருடைய காலத்திற்கு முன்பே தமிழ் மொழிக்கு இலக்கணக் கோட்பாடுகள் வழிவழியாக வந்துள்ளன என்பதை உறுதிப்படுத்துகின்றார். இலக்கணக் கோட்பாடுகளில் உத்தியும் ஒன்றாகும். தொல்காப்பியத்தில் உத்தி எவ்வாறெல்லாம் பயின்று வந்துள்ளது என்பதனை விளக்கும்போது தொல்காப்பியத்தின் நூல் அமைப்பு, அதன் காலம், உத்திக்குரிய விளக்கம், அதன் வகை, வேறுபாடுகள், முரண்கள் என அனைத்தையும் ஆராய்ந்து விளக்கியுள்ளார்.

கொள்வோன் கொள்வதை அறிந்து, சொல்லவரும் கருத்தையும் படைப்போன் பெறவேண்டிய உணர்ச்சிகளையும் கருத்தில் கொண்டு பாடல் இயற்றும் முறைகளே உத்திகள் எனப்படும். இந்நூலில், உத்தி என்பதற்குரிய தோற்றுவாய், உத்தி சொல்லும் பொருளும், இலக்கியத்தில் உத்தி, நிகண்டுகள், அகராதிகளில் விளக்கிய உத்திகள் பற்றிக் கால முறைப்படி விளக்கம் அளித்து இவற்றுள் எதுவும் தொல்காப்பியர் கூறிய உத்திகள் பற்றிப் பேசப்படவில்லை நன்னூலார் கூறிய உத்திகளே உள்ளன என்னும் ஆதங்கத்தைக் கூறி இவை ஆராயப்பட வேண்டிய தேவையையும் விளக்கியிருக்கிறார்.

தொல்காப்பியம் 32, கௌடலியம் 33, சரகசமிதை 34 என உத்திகளின் எண்ணிக்கை வேறுபடுவதை விளக்கிக் கூறியுள்ளார். தொல்காப்பிய உரையாசிரியர்களின் உரை வேறுபாடுகளை அடிப்படையாகக் கொண்டும் உத்திக்கு விளக்கம் அளித்துள்ளார். இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், பேராசிரியர், தெய்வச்சிலையார், கல்லாடனார், பெயர் தெரியாத ஒருவர் என உரையாசிரியரின் உரைகளில் கூறியுள்ள உத்திகள் பற்றியும், பெயர் வேறுபாடுபற்றியும், உத்திகளின் வரிசை முறை மற்றும் வைப்பு முறை, உத்தி பெயர், சொல்,தொடர் நிலைகளில் காணப்படும் வேறுபாடுகளுக்கு எளிய, மிகப் பொருத்தமான எடுத்துக்காட்டுகளுடன் விளக்கியிருப்பது ஆசிரியரின் நுண் ஆய்வைப் புலப்படுத்துகிறது.

உரைகள் காட்டும் உத்திகள் எனும் பகுதியில் ஒரே உத்திக்குப் பல்வேறு நூற்பாக்கள், ஒரே நூற்பாவிற்குப் பல்வேறு உத்திகள், தொல்காப்பியர் கூறிய 32 உத்திகளுக்கு விளக்கம் அளிக்கும் உரையாசிரியர்கள் மேலும் 21 உத்திகளையும் கூறியுள்ளனர் என்பதனையும் ஆசிரியர் ஆராய்ந்து விளக்கியிருப்பது சிறப்பு. இந்நூல் தொல்காப்பியத்தில் இடம் பெற்றுள்ள உத்தி என்னும் சொல், உத்தி வகைகள் என அனைத்தும் வடமொழியிலிருந்து தோன்றினவே எனக் கூறும் பல எதிர்வாதங்களையெல்லாம் முறியடிக்கும் வகையில் உத்தி என்பது தமிழ் மொழிக்கே உரியது என்பதனைப் பல இலக்கண, இலக்கியங்கள் வழி நிறுவித் தமிழ் மொழிக்கு மேலும் சிறப்புச் சேர்த்திருக்கும் இந்நூலாசிரியருக்குப் பாராட்டுகள். அவரின், தமிழ்ப் பணி தொடர வாழ்த்துக்கள். தமிழ் ஆர்வலர் சீ.மா. துரையரசு அவர்களின் பெயரால் அமைந்த அறக்கட்டளையின் மூன்றாவது பொழிவாக இந்நூல் வெளிவருகிறது. அறக்கட்டளைப் பொறுப்பாளர் முனைவர் து. ஜானகி அவர்களுக்கு எனது பாராட்டுக்கள்.

மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் புரட்சித் தலைவி அம்மா அவர்கள் தமிழ் மீதும், தமிழர் மீதும், தமிழ்நாட்டின் மீதும், தமிழ்ப் பண்பாட்டின் மீதும் கொண்டுள்ள அன்பும் கருணையும் அளப்பரியன. ஆதலால், இவற்றின் மேம்பாட்டுக்கெனப் பல திட்டங்களை மேற்கொண்டு வருகின்றார்கள். ஒல்லும் வகையெல்லாம் தமிழ் வளர்த்துவரும் மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் புரட்சித் தலைவி அம்மா அவர்களுக்கு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் சார்பில் நன்றிகளைப் பதிவு செய்கின்றேன்.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையைக் காட்டிவரும் பள்ளிக்கல்வி, இளைஞர் நலம், விளையாட்டு, தமிழ் ஆட்சிமொழி, சட்டம், நீதிமன்றங்கள் மற்றும் சிறைத்துறை அமைச்சர் மாண்புமிகு என்.ஆர். சிவபதி அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித்துறை அரசுச் செயலாளர் முனைவர் மூ. இராசாராம் இ.ஆ.ப. அவர்களுக்கும் என் இனிய நன்றிகளை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

அறக்கட்டளைச் சொற்பொழிவின் எழுத்துருவை மெய்ப்புத் திருத்தம் செய்த முனைவர் ஆ. தசரதன் அவர்களுக்கும் மற்றும் தட்டச்சர் செல்வி தீபிகா லட்சுமணன் ஆகியோருக்கும் எம் நன்றிகள் என்றுமுண்டு. இந்நூலைச் சிறப்பாக அச்சிட்டுத் தந்த இலட்சுமி ஏஜென்சிஸ் அச்சகத்தாருக்கும் என் பாராட்டுகள்.

இயக்குநர்

## ஆசிரியர் குறிப்பு



தி. அமுதன்

புதுச்சேரியில் 03.07.1979இல் இராச. திருமாவளவன், பத்மினி தம்பதியர்க்கு மகனாகப் பிறந்தார். புதுவைப் பல்கலைக்கழகத்தில் முதுகலைச் செயல்முறைத் தமிழ் பயின்று முதல் மாணவராகத் தேர்ச்சி பெற்றுப் பல்கலைக்கழகத் தங்கப் பதக்கத்தை வென்றார் (2002). தொடர்ச்சியாக இதே பல்கலைக்கழகத்தின் தமிழியற்புலத்தில் இளமுனைவர் பட்டமும் (2003), முனைவர் பட்டமும் (2006) பெற்றார். மொழியியலின் மீதிருந்த ஈடுபாட்டால் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் முதுகலை மொழியியல் பயின்றார். இலக்கணம், மொழியியல், மற்றும் கல்வியியல் துறைகளில் தொடர்ந்து கட்டுரைகளையும், ஆய்வுரைகளையும் வழங்கி வருபவர். தமிழ், ஆங்கிலம் மட்டுமின்றி இந்தி, சமஸ்கிருதம், கன்னடம் ஆகிய மொழிகளைக் கற்றறிந்தவர். மைசூரில் இயங்கும் இந்திய மொழிகளின் நடுவண் நிறுவனத்தின் தேர்வு மற்றும் மதிப்பீட்டுத் துறையில் நான்காண்டுகள் ஆய்வாளராகப் பணிபுரிந்துள்ளார். தற்பொழுது புதுச்சேரியில் உள்ள பெருந்தலைவர் காமராசர் அரசுக் கலைக் கல்லூரியில் தமிழ்த் துறையில் உதவிப் பேராசிரியராகப் பணிபுரிகிறார்.

# என்னுரை

தமிழில் நடைபெற்ற தொடக்ககால ஆராய்ச்சிகளில் பெரும்பான்மை கால ஆராய்ச்சிகளாகவே அமைந்தன. அவ்வாறு கால ஆராய்ச்சி செய்தோர் இருவகை அணிகளாகத் திரண்டனர். தமிழ்க் குடியை,

> கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு
> முன்தோன்றி மூத்தகுடி

என்னும் ஆன்றோர் வாக்குக்கேற்பத் தமிழின் தொன்மையைக் கி.மு.விற்கு முற்பட்டதென்று ஒரு சாரார் உலகிற்குப் பறைசாற்றினர். இவர்களுக்கு நேர் எதிரான நிலையில் மற்றொரு சாரார் தமிழ்மொழி கி.பி.க்குப் பிற்பட்டதென்று வாதிட்டனர்.

தமிழில் கிடைக்கின்ற முதல் நூல் தொல்காப்பியம் என்பதால் இவ்விரு அணியினரும் தமிழ் மொழியின் காலத்தை வரையறை செய்யும் கருவியாகத் தொல்காப்பியத்தைப் பயன்படுத்தினர். தொல்காப்பியம் எழுதப்பட்ட காலத்தை வரையறை செய்து விட்டாலேயே தமிழ் மொழியின் காலத்தைக் கி.மு.விற்கு முன்போ அல்லது கி.பி.க்குப் பின்போ கொண்டு செல்லலாம் என்பது இவ்விரு அணியினரின் கருத்து.

எனவே, இவ்விரு அணியினரும் தொல்காப்பியப் பாயிரம் தொடங்கி அதன் இறுதி நூற்பாவாகிய உத்தி வரையுள்ள பல்வேறு கூறுகளைத் தம் கால ஆராய்ச்சிக்குப் பயன்படுத்தியுள்ளனர். அக்கூறுகளில் ஒன்றான உத்திகளைப் பற்றித் தமிழில் வெளிவருகின்ற விரிவான முதல் நூல் “தொல்காப்பிய உத்திகள்” என்னும் இந்நூலேயாகும்.

இந்நூல், கால ஆராய்ச்சியில் ஈடுபட்டவர்கள், உத்தியைச் சொல் நிலையிலேயே ஆராய்ந்தனர் என்பதையும் பயன்பாட்டு நிலையில் ஆராய வேண்டிய தேவை என்ன என்பதையும் விளக்குகின்றது.

மேலும் இந்நூல் பிறதுறை அறிஞர்களின் கருத்துக்களை ஒப்பு நோக்கித் தொல்காப்பியத்தில் பட்டியலிடப்பட்டுள்ள உத்திகள் தமிழுக்குரியன என்பதையும் தமிழிலிருந்தே வடமொழிக்குச் சென்றுள்ளன என்பதையும் சான்றுகளுடன் நிறுவியுள்ளது.

இவற்றிற்கெல்லாம் முத்தாய்ப்பாக வடமொழி அறிஞர்களே இவ்வுத்திகள் வடமொழிக்குரியன அல்ல என்று கூறுவதையும் இந்நூல் பதிவு செய்துள்ளது.

மேலும் தொல்காப்பியர் பட்டியலிடும் உத்திகளும் அதன்பின் வந்த இலக்கண நூல்களால் வழிமொழியப்பட்டுள்ள தன்மையும் தொல்காப்பிய உரையாசிரியர்கள் உரை செய்யும் பொழுது 'பொருட்புலப்பாட்டு நெறி' என்னும் நிலையில் இவ்வுத்திகளைப் பயன்படுத்திய தன்மையும் விரிவாக இந்நூலில் ஆராயப்பட்டுள்ளன.

தொல்காப்பிய உரையாசிரியர்கள் ஒரே ஒரு நூற்பாவின் பொருளை விளக்குவதற்கு ஒன்றிற்கு மேற்பட்ட உத்திகளின் துணையை நாடியிருப்பதும், ஒரே நூற்பாவிற்கு வெவ்வேறு உரையாசிரியர்கள் வெவ்வேறு உத்திகளின் துணைக்கொண்டு முற்றிலும் வேறான பொருள் விளக்கத்தைக் கொடுத்துள்ளமையும் குறிப்பிடத்தக்கவை.

இன்று இலக்கணம் கற்கும், அதில் ஆராய்ச்சி மேற்கொள்ளும் மாணவர்கள் பழந்தமிழரின் பொருள் புலப்பாட்டு நெறியாகத் திகழ்ந்த உத்திகளை நன்குணர்ந்து நூற்பாக் கருத்துக்களை அணுகினால் இலக்கணம் கரும்பாய் இனிக்கும் என்பது திண்ணம்.

இவ்வுத்திகள் தொடர்பான சிந்தனை என் நெஞ்சில் வேர்விட்டு வளரக் காரணமாய் இருந்த புதுவைப் பல்கலைக்கழகப் பேராசிரியர்கள் முனைவர் அ.அறிவுநம்பி அவர்களும் முனைவர் ம.மதியழகன் அவர்களும் என்றும் என் நன்றிக்கு உரியவர்கள்.

திரு சி.மா.துரையரசு அறக்கட்டளைச் சொற்பொழிவினை நிகழ்த்துவதற்கு வாய்ப்பினை அளித்ததோடு நூல் வெளியீட்டில் அதிக ஆர்வம் காட்டி வெளியிட்டு உதவிய உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்களுக்கும், அதன் அயல்நாட்டுத் தமிழர் புலத்தின் உதவிப் பேராசிரியர் முனைவர் து.ஜானகி அவர்களுக்கும் என் நன்றிகளை உரித்தாக்குகின்றேன்.

இந்நூலை வடிவமைத்த திருமதி எ.ம.லட்சுமி அவர்களுக்கும், மெய்ப்புத் திருத்தம் செய்த முனைவர் ஆ. தசரதன் அவர்களுக்கும் மற்றும் நூல்வெளியீடு தொடர்பான ஏற்பாடுகளைச் செய்த நிறுவனப் பணியாளர்களுக்கும் மிக்க நன்றி. இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த சரவணா அச்சகத்தாருக்கும் எனது பாராட்டினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தி. அமுதன்

# பொருளடக்கம்

# முன்னுரை

உலகின் மூத்த மொழிகளுள் ஒன்று தமிழ். பல்லாயிரம் ஆண்டுகளாக, இன்றுவரை, பேசவும் எழுதவும் இம்மொழி பயன்பட்டுவருகிறது. இப்பெரும் காலப் பரப்பில் தமிழைப் பேசிய மக்களின் சிந்தனைகள் இலக்கிய இலக்கணங்களாகவும், இன்னும் பல்வேறு துறைக் கருவூலங்களாகவும் இம்மொழியில் பதியப்பட்டுப் பாதுகாக்கப் பட்டுள்ளன. அவற்றில் காலவெள்ளத்தில் அழிந்தவை போக மிஞ்சியவை பல்வகைப் படைப்புக்களாக அடுத்தடுத்த தலைமுறையினரின் பயன்பாட்டில் இருந்துவருகின்றன.

படைப்புக்களை உருவாக்கும் படைப்பாளி, அப்படைப்பை உருவாக்கத் தனக்கென ஒரு தொழில் நுட்பத்தைக் கடைப்பிடித்திருப்பார். இத்தொழில் நுட்பம் அவருக்குத் தன்னளவில் இயற்கையாகவோ அல்லது வழிவழியாகவோ கிடைத்திருக்கும். மொழியில் உருவான அப்படைப்பைப் பயன்படுத்திக்கொள்ள நினைப்பவர் படைப்பாளியின் அத்தொழில் நுட்பத்தை அறிந்துகொண்டாலே அப்படைப்பின் முழுமையான பயனைப் பெறமுடியும். ஒரு படைப்போடு உறவுடைய படைப்பாளியும் பயனாளியும் அப்படைப்பைப் புரிந்துகொள்வதற்குப் பயன்படுத்தும் தொழில் நுட்பமே உத்தி என்றழைக்கப்படுகின்றது. கருத்து முதலிய பிற இன்றியமையாக் கூறுகளுக்கு இணையாக, ஒரு படைப்பின் உத்தி, அப்படைப்பின் சிறப்பை முடிவு செய்கின்றது.

மொழியில் அமைந்த படைப்புகளில் ஒன்றாகிய இலக்கணத்தை நூலென்று குறிப்பிடுகிற *தொல்காப்பியம்*, அது எவ்வாறு அமைய வேண்டும் என்பதை,

> ஈரைங் குற்றமும் இன்றி நேரிதின்
> முப்பத் திருவகை உத்தியொடு புணரின்
> நூலென மொழிப நுணங்கு மொழிப் புலவர்
>
> (தொல்.பொருள்.644:3–5;இளம்)

எனக் கூறுகிறது. இதற்குப் பேராசிரியர்,

> *...பத்து வகைக் குற்றமுமின்றி நுண்பொருளவாகிய முப்பத்திருவகை உத்தியொடு பொருந்திவரின் அதனை நூலென்று சொல்லுப நுண்ணிதின் உணர்ந்துரைக்கும் புலவர்...*

*நேரிதின் என்றதனான் முதல்வன் செய்த நூலாயினும் வழி நூலாயினும் அவ்வழி நூலின் முழுவதூஉந் தெரிந்துணரும் நுண்ணுணர்வினார்க்கே முப்பத்திரு வகை உத்தியும் புலனாவதெனக் கொள்க.*

எனக் கூறுகின்றார். அதாவது 'நூல் முழுவதையும் நன்கு உணர்ந்தால்தான் அதன் தொழில் நுட்பமான உத்தி பற்றிய தெளிவும் ஒருவர்க்கு ஏற்படும்' என்பது பேராசிரியரின் கருத்து. மாறனலங்கார ஆசிரியர்,

அவற்றுள்
உத்தம நூல்மரபு உணர்த்துங் காலை
முத்திறத்து ஒன்றாய்ப் பாயிர முதலுபு
நாற்பொருள் நலனுற நவில்வது வாகிச்
.......................................................
குற்றம் ஒன்றின்றிக் குழகொடும் எண்ணான்கு
உத்தியிற் சிறந்ததென்று உரைத்தனர் புலவர்.

(மாறன். பாயிர உரை.6)

என்னும் நூற்பாவழி நூலின் சிறப்பை விளக்குகின்றார். 'ஏனைய கூறுகளோடு உத்தியின் சிறப்பினால் அமைவது உத்தம நூல்' என்னும் இவரது கருத்து எண்ணத் தகுவது.

இவற்றால் அன்றைய இலக்கணப் புலவர், உத்தியைப் பயன்படுத்திச் சிறப்போடு அமைவதே உயர்ந்த நூல் எனக் கருதியது புலனாகிறது.

தமிழில் அத்தகைய தொழில் நுட்பச் சிந்தனையாகிய உத்தி பற்றிய கருத்து இலக்கிய, இலக்கண உலகில் எந்த அளவிற்குச் சிறப்பிடம் பெற்றுள்ளது என்பது ஆய்விற்கு உரிய ஒன்று.

தமிழில் இலக்கண நூலாகவும் வாழ்வியல் நூலாகவும் அமைவதோடு தமிழில்கிடைத்துள்ள நூல்களில் காலத்தால் முற்பட்டதாகவும் விளங்குவது *தொல்காப்பியம்* என அறிஞர் குறிப்பிடுகின்றனர். அதனால் உத்தியைப் பற்றிய ஆய்வைத் *தொல்காப்பிய* நூலிலிருந்தே தொடங்குவது பொருத்தமாகும்.

அதன் அடிப்படையில் இந்நூலின் தலைப்பு, *தொல்காப்பிய உத்திகள்* என அமைகிறது.

மொழியாயினும் வேறு துறைகளாயினும் தொழில் நுட்பம் என ஒன்றில்லாமல் எந்தப் படைப்பும் அல்லது பொருளும் உருவாகாது. அத்தொழில் நுட்பம் என்னும் உத்தி சிறந்ததாகவோ, சிறப்புக் குறைந்ததாகவோ இருக்கலாம். ஆனால் உத்தியில்லாமல் படைப்பு எதுவும் நிகழாது என்பது வெளிப்படை.

இன்று 'உத்தி' என்பது ஒரு கலைச்சொல்லாகப் பல துறைகளிலும் பயன்படுகிறது. இலக்கிய, இலக்கணத் துறைகளில் இச்சொல்லின் பயன்பாடு மிகுதி. இதற்கேற்ப,

1. *தொல்காப்பியத்தில்* குறிப்பிடப்பட்டுள்ள உத்தி பற்றிப் பழைய உரையாசிரியர்களும் தற்கால அறிஞர்களும், நிகண்டு, அகராதி போன்றனவும் கூறும் பொருளென்ன எனக் காண்பதும்,

2. உரையாசிரியர்கள் உத்திகளைப் பற்றிப் பெயர் நிலையிலும் பொருள் நிலையிலும் கொண்டுள்ள கருத்துகள் யாவை எனக் காண்பதும்,

3. உத்திகளை உரையாசிரியர்கள் தொல்காப்பிய உரைகளில் எங்ஙனம் பயன்படுத்துகிறார்கள், *தொல்காப்பியத்தில்* குறிப்பிடப்படாத உத்திகளாக அவர்கள் காட்டுவன யாவை எனக் காண்பதும்,

4. தமிழுக்கெனத் தனியான உத்திக் கோட்பாடுகள் இருந்திருக்கும் என்பதைத் *தொல்காப்பியத்தின்வழி* உறுதிப்படுத்த முடியுமா எனக் காண்பதும் இந்நூலின் முக்கிய நோக்கங்களாகும்.

இந்நூல்,

1. தொல்காப்பியமும் உத்தியும்
2. உத்தி – உரைவேறுபாடுகள்
3. உரைகள் காட்டும் உத்திகள்

என மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இந்நூலில் கண்ட முடிபுகள் இறுதியில் தொகுத்துக் கொடுக்கப்பட்டுள்ளன.

'தொல்காப்பியமும் உத்தியும்' என்னும் இப்பகுதி *தொல்காப்பியம்* பற்றிய அறிமுகச் செய்திகளையும், அதில் இடம்பெறும் உத்தி, அதன் தோற்றுவாய், சொற்பொருள், உரையாசிரியர் விளக்கம், ஒப்பு நோக்கு நிலையில் தமிழிலும் வடமொழியிலும் கூறப்பெறும் உத்திகளுக்கிடையிலான உறவு முதலியவற்றை விளக்குகிறது.

'உத்தி – உரை வேறுபாடுகள்' என்னும் தலைப்பில் அமைந்த இப்பகுதி, *தொல்காப்பிய* உரையாசிரியர்கள் பற்றியும், அவர்களில் இளம்பூரணர், பேராசிரியர் ஆகியோர், *தொல்காப்பியம்* சுட்டும் 32 உத்திகளின் பெயர்களையும் வைப்பு முறைகளையும் முடிவு செய்வதில் கொண்ட வேறுபாடுகள், அவற்றை வரையறை செய்வதில் முற்கால, பிற்கால அறிஞர்களுக்கிடையே காணப்படும் கருத்து வேற்றுமைகள் ஆகியன பற்றியும் ஆராய்கிறது.

'உரைகள் காட்டும் உத்திகள்' என்னும் இப்பகுதி, *தொல்காப்பியப்* பழைய உரையாசிரியர்கள் அனைவரும், *தொல்காப்பியம்* சுட்டும் உத்திகளில் ஒன்றினையோ பலவற்றையோ தம் உரைகளில் ஆங்காங்கே சுட்டிக்காட்டிச் செல்வதையும், அவர்களில், ஒரே நூற்பாவிற்கு உரியதாக வெவ்வேறு உத்திகளை வெவ்வேறு உரையாசிரியர்கள் குறிப்பிடுவதையும், ஓர் உரையாசிரியரோ அல்லது பலரோ ஒரே நூற்பாவிற்குப் பல்வேறு உத்திகளைச் சுட்டிக் காட்டும் போக்கையும், *தொல்காப்பியம்* சுட்டாத புதிய உத்திகளை இவர்கள் தம் உரைகளில் சுட்டிக்காட்டுவதையும் புலப்படுத்துகிறது.

முடிவுரைப் பகுதி, முந்தைய ஒவ்வொரு பகுதியிலும் கண்ட முடிவுகளின் தொகுப்பாக அமைகிறது.

# தொல்காப்பியமும் உத்தியும்

தமிழ் இலக்கிய வரலாற்றில் முதல் நூலாகக் குறிக்கப் பெறுவது *தொல்காப்பியம்*. இது ஓர் இலக்கண நூலாகும். தமிழரின் அன்றைய மொழி, இலக்கியச் சிந்தனைகளைத் தெரிவிப்பதோடு வாழ்வியல் சிந்தனைகளையும் தெரிவிப்பதாக இந்நூல் விளங்குகிறது. அதனால் தமிழர் சிந்தனையில் விளைந்த எந்த ஒரு கருத்தைப் பற்றி ஆராய்கின்றவரும் அதனைப் பற்றித் *தொல்காப்பியம்* என்ன சொல்கிறது என்பதை அறிவதில் ஆர்வம் காட்டுகின்றனர். அந்த வகையில் உத்திகளைப் பற்றிய சிந்தனைக்கும் முதல் நூலாகத் *தொல்காப்பியம்* விளங்குகிறது.

'உத்தி' என்பது எல்லாத் துறைகளிலும் கடைப்பிடிக்கப்படும் தொழில் நுட்பமாக அறியப்படுகிறது. வேறு வகையில் சொல்வதென்றால் ஒரு படைப்பின் அல்லது உற்பத்திப் பொருளின் திறனை மதிப்பிடும்போது அதன் உத்தி இன்றியமையாததாகக் கருதப்படுகிறது. உத்தியே ஒரு படைப்பின் அல்லது உற்பத்திப் பொருளின் சிறப்பிற்குக் காரணமாகிறது எனக் கருதும் அளவிற்கு 'உத்தி' முதலிடம் பெறுகிறது.

பழந்தமிழ் நூலான *தொல்காப்பியம்*, உத்திகளைப் பற்றி விரிவாகப் பேசுகிறது. இவ்வாறு பேசுவதே, ஒரு படைப்பு அல்லது பொருள் உருவாக்கம் சிறப்பதற்கான வழிமுறை பற்றிய விரிவான சிந்தனை தொல்காப்பியர் காலத்தில் இருந்திருக்கிறது என்பதைப் புலப்படுத்துகிறது.

எனவே ''தொல்காப்பியமும் உத்தியும்'' என்னும் இத்தலைப்பு, *தொல்காப்பியம்* பற்றிய அறிமுகச் செய்திகளையும், அதில் இடம்பெறும் உத்தி, அதன் தோற்றுவாய், சொற்பொருள், உரையாசிரியர் விளக்கம், ஒப்பு நோக்கு நிலையில் தமிழிலும் வடமொழியிலும் கூறப்பெறும் உத்திகளுக்கிடையிலான உறவு முதலியனவற்றை ஆராய்கிறது. அதற்கேற்ப இப்பகுதி,

1) தொல்காப்பியமும் அதன் காலமும்
2) உத்தி:தோற்றுவாய்
3) உத்தி:தமிழிலும் வடமொழியிலும்

என மூன்று தலைப்புகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

## தொல்காப்பியமும் அதன் காலமும்

*தொல்காப்பியம்* தமிழில் கிடைத்துள்ள முதல் நூல் என்பது அறிஞர் பலரும் ஒத்துக்கொள்கின்ற பொதுவான கருத்தாகும். ஆயினும் இக்கருத்தை மறுப்பவரும் உள்ளனர்.

இந்நூல் காலத்தால் மிகவும் முற்பட்டது என்பதற்கு உரிய காரணங்களை அறிஞர் சிலர் காட்டுவதைப் போலவே, இது காலத்தால் பிற்பட்டது என்பதற்கும் அறிஞர்கள் அதற்கான பல காரணங்களை முன் வைக்கின்றனர். அவற்றில் ஒன்றாக உத்திகளைப் பற்றிய கருத்தும் இடம்பெற்றுள்ளதால் *தொல்காப்பிய* நூல் அமைப்பைப் பற்றியும் அதன் காலத்தைப் பற்றியும் அறியவேண்டியது தேவையாகிறது.

### நூல் அமைப்பு

*தொல்காப்பியம்* எழுத்து, சொல், பொருள் என்னும் மூன்று அதிகாரங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வோர் அதிகாரமும் ஒன்பது இயல்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. உத்திகளைப் பற்றிய தகவல்கள் மூன்றாவது அதிகாரமான பொருளதிகாரத்தின் இறுதியியலாக அமைந்துள்ள மரபியலில் கூறப்பட்டுள்ளன. இவ்வாறு, உத்திக்கான கருத்துகள் இறுதியில் அமைந்துள்ளமை, வெவ்வேறு சிந்தனைகளுக்கு வித்திட்டுள்ளது.

> *மரபியல் 94, 'மரபு நிலை' என்னும் நூற்பா முதலாக 111 'ஒத்த காட்சி' என்னும் நூற்பாவில் 'மெய்ப்பட நாடி' என்பது வரை அமைந்துள்ள பொருள், பாயிரமாகப் பொருந்துவதேயன்றித் தொல்காப்பியம் போன்ற சிறந்த பழைமையான நூலினுள் வைக்கத் தக்கதன்று*[1]

என, உத்திகள் கூறப்பட்டுள்ள *தொல்காப்பியத்தின்* இறுதிப் பகுதியை இடைச்செருகல் என்பார் ஆபிரகாம் அருளப்பன்.

வெள்ளைவாரணனும் மரபியல் பகுதியில் உள்ள நூற்பாக்கள் பல இடைச்செருகல் என்னும் கருத்துடையவரே. ஆனால் அவர், உத்தி தொடர்பான இறுதி நூற்பா இடைச்செருகல் எனக் கருதார்.

> *71 முதல் 85 வரையுள்ள சூத்திரங்கள் பதினைந்தும் நால்வருணப் பாகுபாடு இத்தமிழ் நாட்டில் உலக வழக்கில் வேரூன்றத் தொடங்கிய மிகப் பிற்*

> *காலத்திலேதான் இம்மரபியலில் இடம் பெற்றிருத்தல் வேண்டும்.*[2]

எனச் சாதிப் பாகுபாட்டை முன்வைத்துச் சில நூற்பாக்களை அவர் இடைச்செருகல் என்கிறார்.

மேற்சொன்ன இருவரும் உத்தி, சாதி போன்ற கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு *தொல்காப்பிய* மரபியல் நூற்பாக்களுள் சிலவற்றை இடைச் செருகல் என்றனர்.

> *நூற்பாவின் இறுதியில் புறநடையாக உரைக்கப் பட்டிருப்பது ஏனைய புறநடைகளோடு ஒப்பிடு மிடத்துத்தான், பின் வந்த பேதைப் புலவன் படைப்பெனப் பேசாநிற்கிறது.*[3]

எனச் சி. இலக்குவனார், இதற்கு நூல் அமைப்பைக் காரணம் காட்டித். '*தொல்காப்பிய* இறுதி நூற்பா புறநடையாக அமைந்திருக்க வேண்டும். அவ்வாறு இல்லாமல் உத்தி குறித்த நூற்பாவாக அமைந்திருப்பதால் அது இடைச்செருகல்' எனக் கருதுகிறார். இவ்வாறு இவர்கள் கூறும் மரபியல் பகுதிகள் இடைச்செருகல் என்பதை மறுப்பவரும் உள்ளனர்.

> *தொல்காப்பிய மரபியலில் நூற்பாக்கள் அனைத்தும் தொல்காப்பியர் இயற்றியவையே. அவற்றுள் சில இடைச்செருகலுமன்று இடமாறிச் செருகியவையு மன்று என்பது நாம் ஆராய்ந்து கண்ட முடிவு*[4]

எனத் *தொல்காப்பிய* மரபியல் பகுதியை ஆராய்ச்சி செய்த ம. சத்தியமூர்த்தி கூறியுள்ளார். இவ்வாறு எதிர் எதிரான கருத்துகள் மரபியல் இறுதிப் பகுதியைப் பற்றிக் கூறப்படும் நிலையில்,

> *இடைச்செருகல் என்று ஆய்வாளன் எதனையும் தள்ளிவிட்டு ஆராயக்கூடாது. அப்படிச் செய்தால் நாம் ஏற்றுக் கொண்ட நூற்பாக்களும் இன்னொருவரால் இடைச்செருகல் என்று அதே காரணங் காட்டித் தள்ளப்பட்டுவிடும்*[5]

என்னும் பொற்கோவின் கருத்து எண்ணிப்பார்க்கத்தக்கது. இவ்வடிப்படையில், உத்திகள் அடங்கிய *தொல்காப்பிய* மரபியல் பகுதிகள் தொல்காப்பியரால் இயற்றப்பட்டவை என்பது இந்நூலாசிரியரின் கருத்தாகிறது.

**காலம்**

*தொல்காப்பியம்* காலத்தால் மிகவும் முற்பட்டது எனக் கூறுபவர்களைப் போலவே அது கிறித்து பிறப்புக்கு ஒரு சில நூற்றாண்டுகள் பிற்பட்டது எனக் கூறுகின்றவர்களும் உள்ளனர் என்பது முன்னர்க் கூறப்பட்டது. இங்கு அவ்விரு வகையினர் கருத்துகளும் ஒப்புநோக்கப்பெறுகின்றன.

*தொல்காப்பியக்* காலத்தைப் பற்றி முதன் முதல் குறிப்பிடும் நூல் *இறையனார் களவியல் உரையாகும்*. இது, பாண்டிய மன்னர்கள் மூன்று தமிழ்ச் சங்கங்களை நிறுவித் தமிழ் வளர்த்த வரலாற்றையும் அச்சங்கங்களில் இருந்த புலவர்கள், அப்போது ஆட்சி செய்த மன்னர்கள் ஆகியோர் பற்றியும் குறிப்பிடுகிறது. இதனை ஆராய்ந்த வெள்ளைவாரணன் களவியல் உரைக் கருத்துகளின் அடிப்படையில் தொல்காப்பியர் காலத்தைக் கி.மு. 5320 என வரையறுக்கிறார்.[6]

தமது *தமிழிலக்கிய வரலாற்றில்* கா. சுப்பிரமணிய பிள்ளை,

> *ஆங்கிலம் கற்ற சிலர் வான்மீகி இராமாயணம் கி.மு.எட்டாவது நூற்றாண்டில் ஏற்பட்டதாகக் கூறுகிறார்கள். அங்ஙனமாயின் தொல்காப்பியத்தையும் அவர்கள் அவ்வாறே கொள்வார்கள். எங்ஙன மாயினும் கி.மு. நாலாவது நூற்றாண்டிற்குப்பின் றோன்றிய வடமொழி இலக்கணமாகிய பாணினீயத்திற்கு இந்நூல் முற்பட்ட தென்பது தெளிவு...*
>
> *ஐந்திரமென்ற வியாகரணத்தைத் தொல்காப்பியர் அறிந்திருந்த காரணம் ஒன்றினாலே அவர் ஆரிய மரபினர் என்று துணிதற்கு இடமில்லை. தமிழாசிரியர் தமிழொடு பிற மொழியுங் கற்றிருத்தல் புதுமையன்றாதலின் என்க...*
>
> *ஆசிரியர் தொல்காப்பியனார் காலத்தே வியாசர் வகுத்த நான்மறைகள் இருந்தில வென்று ஆசிரியர் நச்சினார்க்கினியர் கூறுகின்றார்*[7]

எனக் குறிப்பிட்டுத் தொல்காப்பியர் காலம் வியாச பாரதத்திற்கும் முற்பட்டதென்கிறார். இவர் கருத்துப்படி தொல்காப்பியர் காலம் கி.மு. 7ஆம் நூற்றாண்டிற்கும் முற்பட்டதாகும்.

எம். சீனிவாசையங்கார் 'நிலந்தரு திருவிற் பாண்டியன் கி.மு. 350–இல் இருந்தவன் என்றும் அக்காலமே தொல்காப்பியர் வாழ்ந்த காலம்' என்றும் குறிப்பிடுகிறார்.[8]

நச்சினார்க்கினியர், *தொல்காப்பியத்தை* நால் வேதங்களுக்கும் முற்பட்டதாகக் கொண்டு,

> *நான்கு கூறுமாய் மறைந்த பொருளும் உடைமையின் நான்மறை என்றார். அவை தைத்திரியமும், பௌடிகமும், தலவகாரமும், சாமவேதமுமாம். இனி, இருக்கும் யசுவும் சாமமும், அதர்வணமும் என்பாரும் உளர், அது பொருந்தாது. இவர் இந்நூல் செய்த பின்னர் வேதவியாதர் சின்னாட் பல்பிணிச் சிற்றறிவினோர் உணர்தற்கு நான்கு கூறாக இவற்றைச் செய்தார் ஆதலின். (தொல். பாயிரம் உரை)*

எனக் கூறுகிறார்.

*தொல்காப்பியம்,* வடமொழிப் பாணினீயத்திற்கு முற்பட்டது என்னும் கா.சுப்பிரமணிய பிள்ளை கருத்தையும் எம். சீனிவாசையங்கார் குறிப்பிடும் கி.மு. 350–க்கு உரியதென்பதையும் டி.ஆர். சேஷையங்கார் மறுக்கிறார். 'பாணினி முனிவர் காலம் கி.மு. மூன்றாம் நூற்றாண்டென்றும் பாணினிக்குக் காலத்தால் பிற்பட்டவரே தொல்காப்பியனாரென்றும் தொல்காப்பியச் சிறப்புப் பாயிரம் பிற்காலத்தே செய்து சேர்க்கப்பட்டதென்றும்' கூறுகிறார்.[9]

இவ்வாறு தொல்காப்பியக் காலத்தைக் கி.மு.வுக்குக் கொண்டுசெல்லும் அறிஞர்களிடையே கருத்துப் பலவாக உள்ளமையைக் காணமுடிகிறது.

*தொல்காப்பியக்* காலத்தைக் கி.பி.க்கு உரியதாகக் கருதுவார் அணியில் உள்ள ரா.இராகவையங்கார்,

> *மரபியலில் கூறப்பட்டுள்ள முப்பத்திரண்டுத்திகளும் கௌடலிய அர்த்த சாத்திரத்திலுள்ள முப்பத்திரண்டு உத்திகளோடு ஒத்துக் காணப்படுகின்றன*[10]

என்கிறார். அக்கருத்தை ஏற்ற வையாபுரிப் பிள்ளை,

> *தொல்காப்பியம் பொருளதிகாரத்தின் இறுதியில் முப்பத்திரண்டு வகை உத்திகள் சொல்லப் படுகின்றன. இந்த உத்திகள் கௌடில்யரது அர்த்த*

> *சாஸ்திரம், சுசுருதம் முதலான நூல்களிலும் உள்ளன. கௌடில்யரது காலம் கி.பி. 3–ம் நூற்றாண்டுக்கு முற்பட்டதன்று என்பர் ஆசிரியர் உவிண்டர் நீட்ஸ். எனவே தொல்காப்பியர் காலம் கி.பி. 300க்குப் பிற்பட்டதாகும்.*[11]

எனக் கௌடில்யரின் கால அடிப்படையில் *தொல்காப்பியத்தைக்* கி.பி. 3ஆம் நூற்றாண்டிற்கும் பிற்பட்டதெனக் காட்டுகிறார். இதனை ஏற்காத வெள்ளைவாரணன்,

> *தொல்காப்பிய மரபியலில் உத்தி என்னுஞ் சொல்லாற் குறிக்கப்படும் நூற்புணர்ப்பாகிய முறைமை தமிழ் இலக்கண நூல்களுக்குரிய சிறப்புடையதாதலின் இதற்கு முதனூலாக வடநூல் ஒன்று இருத்தல் வேண்டும் என ஊகிப்பதும் அவ்வூகத்தினை யடிப்படையாகக் கொண்டு தொல்காப்பியர் காலத்தை உறுதிப்படுத்த எண்ணுவதும் பொருத்தமுடையன அல்ல. அர்த்தசாத்திரம் இயற்றிய கௌடலீயர் தமிழ் நாட்டிற் காஞ்சி நகரத்து வாழ்ந்தவராதலின் அவர் காலத்துக்கு முற்பட்ட தொல்காப்பிய மரபியலிலுள்ள உத்திகள் முப்பத்திரண்டினையுளங் கொண்டு தாமியற்றும் பொருள் நூலமைப்புக்கு ஏற்ற வகையில் தாம் செய்த அர்த்தசாத்திரத்திலும் முப்பத்திரண்டு உத்திகளை வகுத்துக் கூறியுள்ளார் எனக் கொள்வதே தொல்காப்பியர், கௌடலீயர் ஆகிய இவ்விருவர் வரலாற்றுக்கும் கால அமைதிக்கும் ஏற்புடையதாகும் எனத் தெளிதல் எளிதாகும்*[12]

எனக் கௌடில்யரைக் காஞ்சி நகரத்தில் வாழ்ந்தவர் எனக் காரணம் காட்டி அர்த்தசாத்திரமே *தொல்காப்பியத்தைப்* பார்த்து எழுதப்பட்டதென்கிறார்.

வடமொழிக் கல்லூரிகள் தமிழகம் முழுவதும் நிறைந்திருந்தமையும் இங்குப் பிறந்து வளர்ந்த அல்லது கல்வி கற்ற வடமொழி அறிஞர் வட புலத்திலும் புகழ் பெற்றிருந்தமையும் வரலாற்று உண்மைகளாகும். இவற்றைக் குறிப்பிட்டு,

> *திக்கநாகர் (கி.பி. 450– 520), தருமபாலர் (கி.பி. 600– 635), தருமகீர்த்தி (கி.பி. 635– 650) போன்ற பெரும் புகழ் பெற்ற தருக்க நூலாசிரியர்கள் தமிழ்*

*நாட்டினின்றே வடநாட்டிற் சென்று தலைமைப் புலமையரசு நடத்தினமையும் இடைக் காலத்திலும் தென்னாட்டில் தோன்றியருளிய சங்கரர் (கி.பி. 800), இராமானுசர் (கி.பி. 1017– 1137) முதலிய தத்துவப் பேருரையாளர்களின் புலமைத்திறனும் கோட்பாடு களும் வடஇந்தியா எங்ஙணும் பரவி வென்றி கொண்டு நின்றமையும் பிறவுங் கருதியுணருங்கால், தொல்காப்பியர் போன்ற பழந்தமிழ்ச் சான்றோர்களின் தருக்க நூற்கருத்துகளே மேற்குறித்த வடமொழி நூல்களில் தழுவிக் கொள்ளப்பட்டன எனத் துணிதலில் இழுக்கொன்று மின்மை பெறப்படும்.*[13]

என வெள்ளைவாரணன் கருத்திற்கு அரண்செய்கிறார் ந.ரா.முருகவேள்.

அர்த்தசாத்திரத்திலோ அல்லது சம்கிதைகளிலோ கூறப்பெறும் உத்திகள் அந்நூலுக்குரியவல்ல என்னும் வடநூல் அறிஞர் கருத்தையும் இங்கு ஒப்பு நோக்குவது பொருத்தமாகும்.

*கௌடலியர், அர்த்தசாத்திரத்தின் இறுதி அதிகாரத்தில், 'தந்திர உத்தி' அல்லது 'அறிவியல் படி வாதிடும் முறை' என்பதைக் குறிக்கும் முப்பத்திரண்டு கலைச் சொற்களைத் தருகிறார். இப்பட்டியல், மருத்துவத்தில் குறிப்பிடத்தக்க நூல்களான சரக சம்கிதை, சுசுருத சம்கிதை என்பனவற்றிலும் காணப்படுகிறது. இது உறுதியாகக் கௌடலியராலோ, சம்கிதை ஆசிரியர்களாலோ உருவாக்கப்பட்டன அல்ல. அறிவியல்படி விவாதம் அமையவேண்டும் என நினைத்த ஒருவராலோ பலராலோ உருவாக்கப்பட்டதாகும்*[14]

என இந்தியத் தருக்கவியல் வரலாற்றினை (History of Indian Logic) எழுதிய சதீஷ் சந்திர வித்தியா பூஷணர் குறிப்பிடுவது கருத்தில் கொள்ளத்தக்கது.

வடபுல அறிஞர்களே இவ்வுத்திகளின் பட்டியலைக் கௌடலியரோ சம்கிதை ஆசிரியர்களோ உருவாக்கவில்லை என்றும் வேறு ஒருவரால் அல்லது பலரால் உருவாக்கப்பட்டது என்றும் தெளிவாகக் குறிப்பிட்ட பிறகு அர்த்த சாத்திரத்தைப் பார்த்துத்தான் தொல்காப்பியர் உத்திகளைத் தம் நூலில்

குறிப்பிட்டார் என்பதோ, அதனால் தொல்காப்பியர் கௌடில்யருக்குப் பிற்பட்டவர் என்பதோ ஏற்குமாறில்லை.

**உத்தி : தோற்றுவாய்**

உத்தியைத் தமிழுக்குரியது என்றும் வடமொழிக்குரியது என்றும் அறிஞர்கள் கருத்துக் கூறியுள்ள நிலையில் அச்சொல்லைப் பற்றியும் அது எப்பொருள்களில் தமிழில் வழங்கி வந்தது என்பதைப் பற்றியும் அதைப் பற்றி உரையாசிரியர்கள் தரும் விளக்கம் என்ன என்பதைப் பற்றியும் அதன் பிறதுறைப் பயன்பாடு பற்றியும் அறிய வேண்டியது தேவையாகிறது. அதற்கேற்ப இப்பகுதி,

1. உத்தி: சொல்லும் பொருளும்
2. உத்தி: உரைப்பொருள் விளக்கம்
3. உத்தி: பிற துறைகள்

என்னும் உட்தலைப்புகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

**உத்தி:சொல்லும் பொருளும்**

ஒரு சொல் ஒரு காலத்தில் வழங்கிய அதே பொருளில் எல்லாக் காலங்களிலும் வழங்கும் எனக் கூறமுடியாது. ஒலிப்பு நிலையிலும் எழுத்து அமைப்பிலும் ஒன்றாகத் தோன்றும் சொற்களும் வெவ்வேறான பொருள் தருவதுண்டு. 'மாண்ட என் மனைவி' (புறம்.191:3) என்னும் தொடர் சங்க காலத்தில் 'மாட்சிமை உடைய மனைவி' எனப் பொருள் தந்தது. இன்றைய வழக்கில் 'இறந்துபோன மனைவி' எனப் பொருள்படுகிறது. 'காமம்' திருவள்ளுவர் காலத்தில் உயர்ந்த அன்பைக் குறித்தது. அதனால்தான் *திருக்குறளின்* மூன்றாம் பால் 'காமத்துப்பால்' எனப் பெயர் பெற்றது. இன்று இழிந்த பாலியல் உணர்வைக் குறிக்கிறது. இவ்வாறு மக்கள்தம் அறிவு வளர்ச்சியும் பல்துறை அறிவும் தேவையும் புதுப்பொருளை ஒரு சொல்லில் ஏற்றிக்கொண்டே செல்வதைக் காணமுடிகிறது. ஒரு சொல் காலந்தோறும் பொருள் வளர்ச்சி பெறுவதால், உத்தி என்னும் சொல்லும் எவ்வாறு பொருள் வளர்ச்சி பெற்றுள்ளது என்பதை இலக்கியங்கள், நிகண்டுகள், அகராதிகள் ஆகியனவற்றைக் கொண்டு அறிய வேண்டியது தேவையாகின்றது.

**இலக்கியத்தில் உத்தி**

பாம்பின் படப்பொறி

> **உத்தி யரவின் பைந்தலை துமிய (அகம்.202:10)**
> **கேழ்கிளர் உத்தி அரவுத்தலை பனிப்ப (நற்.129:7)**
> **ஏழ்மணியங் கேழணி உத்தி (புறம்.382:12)**
> **காந்தளங் குலையினை**
> **யருமணி யவிர் உத்தி யரவு நீருணல் (கலி.45:3)**

என்னும் இடங்களில் உத்தி, 'பாம்பின் படத்தில் உள்ள பொறி அல்லது புள்ளி' எனப் பொருள்படுகிறது.

சீதேவி என்னும் தலைக்கோலம்

> **தெய்வ உத்தியொடு வலம்புரி (திருமு.23)**
> **கவின் பெற்ற**
> **உத்தியொருகாழ் நூலுரித் தரிய (கலி.96:13)**
> **தெய்வ உத்தியொடு செழுநீர் வலம்புரி (சிலம்.6:106)**

என்னும் அடிகளில் உத்தி, கூந்தல் அலங்கார வகைகளில் ஒன்றான 'தலைக்கோலம்' எனப் பொருள்படுகிறது. இதனைச் 'சீதேவி' எனவும் 'சீதேவி என்னும் தலைக்கோலம்' எனவும் நூல்கள் கூறுகின்றன.

**நெற்றிச் சுட்டி**

> **நூலமை பிறப்பின் நீல உத்தி (அகம். 400:5)**

என்னும் அடியில் 'நெற்றிச் சுட்டி' என உத்தி பொருள்படுகிறது.

**சேர்த்தல்**

> **உறுப்பு முரணுறாமற் கந்த உத்தியினால் (மணி.28:15)**

என்னும் அடியில் 'சேர்த்தல்' என உத்தி பொருள்படுகிறது.

இவையெல்லாம் *தொல்காப்பியம்* குறிக்கும் உத்தியின் பொருளுடன் தொடர்புடையனவாக அமையவில்லை.

**உத்தி: நிகண்டுப் பொருள்**

இன்றைய அகராதிப் பணியை அன்றைய நிகண்டுகள் தமிழில் ஆற்றிவந்தன. ஒரு பொருள் குறித்த பல்வேறு சொற்களையும் ஒரு சொல் குறித்த பல்வேறு பொருள்களையும் ஓரிடத்தில் தொகுத்துத் தருவனவாக அவை அமைந்தன. அத்தகு

நிகண்டுகளில் குறிப்பிடத்தக்கவற்றில் உத்திக்கான பொருளாகக் கூறப்பெறுவன யாவை என்பதை இப்பகுதி ஆராய்கிறது.

**திவாகர நிகண்டு**

காலத்தால் முற்பட்டதாகத் *திவாகர நிகண்டு* கூறப்படுகிறது. இது உத்தியை இரண்டு பொருள்களுக்கு உரியதாகக் குறிப்பிடுகிறது. அவை தேமலின் பெயர், படப்பொறியின் பெயர் ஆகும்.

> **சுணங்கு, துத்தி, பொறி, உத்தி திதலை**
> **(நுணங்கு) திதனி, வசந்திகை, தேமல் (361)**
> **உத்தியும் துத்தியும் உரக படப்பொறி (537)**

என்னும் அடிகளில் கூறப்படும் இரண்டு பொருள்களும் தொல்காப்பியர் குறிப்பிடும் உத்தி என்பதன் பொருளோடு ஒத்துப்போகவில்லை.

**பிங்கல நிகண்டு**

*திவாகரத்திற்குப்* பின் சிறந்த நிகண்டாகக் கருதப்பெறுவது *பிங்கல நிகண்டு* ஆகும். இது நான்கு பொருள்களை உத்தி என்பதற்குத் தருகிறது. அவை, பாம்பின் படப்பொறி, தேமல், உரைத்தல், சீதேவி என்னும் தலைக்கோலம் என்பன. இதனை

> **உரகபடப் பொறி சுணங்குஉரை யாடல்**
> **ஒர்திரு வுறுப்பும் உத்தி யாகும் (3194)**

என்னும் இந்நிகண்டின் அடிகள் காட்டுகின்றன. இது *திவாகர நிகண்டு* தந்த இரண்டு பொருள்களோடு உரைத்தல், தலைக்கோலம் என்னும் சீதேஷி, மேலும் இரண்டு பொருள்களைச் சேர்த்துக்கொண்டுள்ளது.

**நாமதீப நிகண்டு**

*நாமதீப நிகண்டு* மூன்று பொருள்களில் உத்தி என்னும் சொல் பயன்படுவதாகக் கூறுகிறது. அவை 1. படப்பொறியின் பெயர், 2. தலைக்கோலத்தின் பெயர், 3. உபாயத்தின் பெயர். ஆகியன. இவற்றை,

> **பை பணம் படம்பொறிப் பேர் உத்தி (262:1)**

> **...தொங்கல் உத்தி பிஞ்ஞகமே**
> **செய்தலைக் கோலம் சேகரமுமாம்... (432:1,2)**

> ...மேவும் அமைச்சு
> உத்தி மந்திரம் சூழ்ச்சி ஊகம் உபாயம் தேர்ச்சி
> தத்தும் அளப்பு ஆலோசனை (361:2–3)

என்னும் *நாமதீப நிகண்டின்* அடிகள் காட்டுகின்றன. இவற்றில் உபாயத்தின் பொருளே தொல்காப்பியர் குறிப்பிடும் உத்திக்கான பொருளோடு தொடர்புடையது.

**சூடாமணி நிகண்டு**

*சூடாமணி நிகண்டில் வேதகிரியார் சூடாமணி நிகண்டு* எனவும் *மண்டலப்புருடர் சூடாமணி நிகண்டு* எனவும் இரண்டுள்ளன. இவற்றில் *வேதகிரியார் சூடாமணி நிகண்டிற்கு* இருவர் உரைகள் கிடைக்கின்றன.

> உத்தி செந்திரு, உறுப்பு, சுணங்கு, உரை,
> உத்தி, துத்தி (189:3)

என்பதற்கு முதல் உரை, உத்தி: 1.செந்திரு, 2.உறுப்பு, 3.சுணங்கு, 4.உரை, 5.துத்தி எனவும், இரண்டாவது உரை, உத்தி: 1.இலக்குமி, 2.அவயவம், 3.தேமல், 4.சொல், 5.துத்தி எனவும் பொருள் கூறுகின்றன. *மண்டலப் புருடர் சூடாமணி நிகண்டு,*

> உத்தி செந்திரு வுறுப்புச்,
> சுணங்கு, உரையாடல், முப்பேர் (108:3)

என, 1. செந்திரு உறுப்பு, 2. சுணங்கு 3. உரையாடல் எனும் மூன்று பொருள்களையே கூறுகிறது.

**வடமலை நிகண்டு**

காலத்தால் பிற்பட்டதான வடமலை நிகண்டு உத்திக்கு மேற்சொல்லிய பொருள்களில் பாம்பின் படப்பொறி, திருவின் உறுப்பு என்பனவற்றை எடுத்துக் கொண்டு அவற்றோடு 'நுண்மைப் பொருள்' என்பதையும் சேர்த்துப் பொருள் கூறுகிறது என்பதை,

> உத்தி யெனும் பெயர் உரகப் பொறியுடன்
> திருவின் உறுப்பொடு நுண்மைப் பொருளுமாம் (244)

என்னும் அடிகள் காட்டுகின்றன.

இதுவரை கண்ட நிகண்டுகளிலிருந்து உத்தியின் பொருளாக, 1. பாம்பின் படப்பொறி, 2. தலைக்கோலம், 3. தேமல், 4. உபாயம், 5. உரைத்தல், 6. இலக்குமி, 7. அவயம், 8. நுண்மைப் பொருள் என எட்டுப் பொருள்கள் பெறப்படுகின்றன. அவற்றில்

உபாயம், உரைத்தல், நுண்மைப் பொருள் என்பன தொல்காப்பியர் உத்திக்குக் குறிக்கிற பொருளோடு ஓரளவு ஒத்து வருகின்றன. அதாவது 'நூல் செய்வதற்கோர் உபாயம்' எனவும், 'நூல் பொருள் உரைத்தல்' எனவும், 'நூலின் நூற்பாக்களின் நுண்மைப் பொருள் காணல்' எனவும் இவற்றை விளக்கமுடியும்.

## உத்தி: அகராதிப் பொருள்

நிகண்டுகள் உத்திக்குக் கூறிய பொருள்களைப் போலவே அகராதிகளும் பல்வேறு பொருள்களைக் கூறியுள்ளன. அவற்றை அறிவதும் நிகண்டுகள் கூறிய பொருளோடு ஒப்பிட்டுக் காண்பதும் தேவையாகிறது.

### தமிழ்ச் சொல்லகராதி

இவ்வகராதி உத்திக்கு 18 பொருள்களைப் பட்டியலிட்டுள்ளது. அவை, 1. அநுமானம், 2. அபின், 3. அறிவு, 4. இசைபு, 5. இணக்கம், 6. சீதேவி யென்னுந் தலைக்கோல் அணி 7. செல்வம், 8. சேர்த்தல், 9. தக்க தன்மை, 10. தந்திர உத்தி, 11. திருவுறுப்பு, 12. தூக்கம், 13. தேமல், 14. பாம்பின் படப்பொறி, 15. பாரம்பரிய வழக்கம், 16. பேச்சு, 17. பேசுதல், 18. பொருந்துமாறு என்பனவாகும்.[15]

### இலக்கியச் சொல்லகராதி

இலங்கையைச் சேர்ந்த சுன்னாகம் குமாரசுவாமிப் பிள்ளையால் உருவாக்கப் பெற்ற இவ்வகராதி ஆறு பொருள்களை உத்திக்குத் தருகிறது. அவை சொல்லல், புணர்ப்பு, பொருந்துமாறு, சீதேவி எனப்படுந் தலைக்கோலம், தேமல், பாம்பின் படப்பொறி என்பனவாகும். இவற்றில் தொல்காப்பியத்தில் சேனாவரையர் உத்திக்குப் 'புணர்ப்பு' எனக் குறிப்பிட்ட பொருளை இவ்வகராதி மட்டுமே கூறுவது குறிப்பிடத்தக்கது.[16]

### தமிழ்ப் பேரகராதி (Lexicon)

சென்னைப் பல்கலைக் கழகத்தால் உருவாக்கப்பட்ட இவ்வகராதி உத்தியை ஐந்து தலைச்சொற்களாகப் பகுத்துப் பொருள் கூறுகிறது. அவை:

உத்தி[1]: 1. ஆபரணத் தொங்கல்
2. சீதேவி யுருவம் பொறித்த தலையணி

உத்தி[2]: 1. பாம்பின் படப்பொறி
2. தேமல்

உத்தி[3]: 1. பேச்சு

உத்தி[4]: 1. சேர்க்கை

2. யுக்தி

3. 32 உத்தி

உத்தி[5]: 1. விளையாட்டில் எதிர்ப்பக்கத்தில் ஒருவனுக்கு நிகரான துணைவன் என்பனவாகும்.

இவ்வாறு உத்தி என்பதற்கு 8 பொருள்களை இவ்வகராதி குறிப்பிட்டுள்ளது. இவற்றில் 32 உத்திகளை *நன்னூல்* அடிப்படையில் இது பட்டியலிட்டுள்ளது.[17]

## செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

தமிழ்ப் பேரகராதியைப் போன்றே இவ்வகராதியும் உத்தியைத் தலைச் சொற்களாகப் பிரித்துப் பொருள் தந்துள்ளது. தமிழ்ப் பேரகராதி, உத்திக்கான தலைச் சொல்லை ஐந்தாகப் பிரித்ததற்கு மாறாக இது ஆறாகப் பிரித்துள்ளது. அவை,

உத்தி[1]: 1. அணிகலத் தொங்கல்

2. திருமகள் உருவம் பொறித்த தலையணி

உத்தி[2]: 1. பாம்பின் படப்பொறி

2. தேமல்

உத்தி[3]: பேச்சு

உத்தி[4]: 1. சேர்க்கை

2. நூலுக்குச் சொல்லப்படும் 32 வகை உத்தி

உத்தி[5]: விளையாட்டில் எதிர்ப்பக்கத்தில் ஒருவனுக்கு நிகரான துணைவன்

உத்தி[6]: 1. கடல்

2. நிகழ்நிலையாக அமைக்கப்பட்ட கண்ணிக்கால்

என்பனவாகும். இதுவும் 32 வகை உத்திகளை *நன்னூல்* அடிப்படையிலேயே பட்டியலிட்டுள்ளது. இது உத்தியின் ஆறாவது தலைச் சொல்லிற்கான பொருளாகக் கடல், நிகழ் நிலையாக அமைக்கப்பட்ட கண்ணிக்கால் ஆகியவற்றைக் கூறுகிறது.[18]

## பெருஞ்சொல்லகராதி

இவ்வகராதி உத்தியை 14 தலைச் சொற்களாகப் பிரித்துக்கொண்டு பொருள் கூறியுள்ளது.

உத்தி[1]: 1.1. கருத்துக்களைச் சொல்வதற்கான இலக்கண, இலக்கிய நூலார் பயன்படுத்தும் 32 வகையான நெறி/ தந்திரவுத்தி,

1.2. யுக்தி,

1.3. உபாயம்,

2. திறன்

3.1. தொழில்துறை நுட்பம்,

3.2. நுட்பம்

உத்தி[2]: 1. நெற்றிச் சுட்டி

2. சீதேவி உருவம் பொறித்த தலையணி, திருவும் பிறையும் சேர்ந்த தலைக்கோலம் எனும் ஓர் அணி

3. ஆபரணத் தொங்கல்

உத்தி[3]: 1. நல்ல பாம்பின் படத்தில் அமைந்துள்ள பொறி, புள்ளிகள்

2. தேமல்

உத்தி[4]: 1. சேர்க்கை

2. இணக்கம்

உத்தி[5]: 1. பேச்சு

2. சொல்

உத்தி[6]: 1. அறிவு

2. சூழ்ச்சி

உத்தி[7]: அனுமானப் பிரமாணம், கருதலளவை

உத்தி[8]: 1. பொருந்துகை

2. விளையாட்டில் எதிரெதிரான இரு அணிகளைப் பிரிப்பதற்கு நிகரான துணைவன்

உத்தி[9] : அபின்

உத்தி[10] : ஒரு குடும்பத்தின் வழிவழியான வழக்கம்

உத்தி[11] : தக்க தன்மை

உத்தி[12] : கடல்

உத்தி[13] : தற்காலிகமாக அமைக்கப்படும் பாசனக் கால்வாய்

உத்தி[14] : செல்வம்

என 26 பொருள்களைப் பட்டியலிட்டுள்ளது. தலைச்சொற்களை வரிசைப்படுத்துவதிலும் பொருள் காண்பதிலும் விரிவான விளக்கம்

தருவதிலும் ஏனைய அகராதிகளிலிருந்து இவ்வகராதி முற்றிலும் வேறுபட்டு விளங்குகிறது. மேலும் ஏனைய அகராதிகள் 32 உத்திகளை *நன்னூல்* அடிப்படையில் பட்டியலிட இது ஒன்று மட்டுமே *தொல்காப்பிய* அடிப்படையில் பட்டியலிடுகிறது.[19]

இதுவரை கூறியவற்றிலிருந்து தொல்காப்பியர் குறிப்பிடும் உத்திக்கான பொருளோடு நிகண்டு, அகராதிப் பொருள்கள் மிகக் குறைவாகவே பொருந்துகின்றன. மேலும் 32 உத்திகள் எனக் குறிப்பிடும் போது பெரும்பாலான அகராதிகள் *நன்னூலையே* சான்று காட்டுகின்றன. *தொல்காப்பிய* உத்திகளை அவை கருத்தில் கொள்ளாமைக்கான காரணம் ஆய்வுக்குரியது. மேலும் காலந்தோறும் உத்தியின் பொருள் படிப்படியாக வளர்ந்துள்ளது. இதனை நிகண்டுகள் 8 பொருள்களைக் கூறியிருப்பவும் அகராதிகள் 28 பொருள்களைக் குறிப்பிடுவதால் அறியமுடிகிறது. சொற்கள் பொருள் விரிவு பெறுவதும் அதன் பயன்பாடு பெருகுவதும் காலத்தின் கட்டாயம் ஆகும். நிகண்டுகளும் அகராதிகளும் இவ்வாறு பொருள் கூறியிருக்க, உரையாசிரியர்கள், அறிஞர்கள் உத்தியை எவ்வாறு வரையறை செய்கின்றனர் என்பதையும் காணவேண்டியது தேவையாகிறது.

**உத்தி: உரைபொருள் விளக்கம்**

*தொல்காப்பிய* மரபியலுக்கு இன்று இளம்பூரணர், பேராசிரியர் என்னும் இரு பழைய உரையாசிரியர்களின் உரைகளே கிடைக்கின்றன. அவற்றோடு பிற இலக்கண நூல்கள், அவற்றின் உரையாசிரியர்கள், பிற ஆய்வு அறிஞர்கள் ஆகியோர் உத்தி என்னும் சொல்லை எவ்வாறு வரையறை செய்கின்றனர் என்பது இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. *தொல்காப்பியத்தின்* மூத்த உரையாசிரியரான இளம்பூரணர்,

> சூத்திரத்தின்பாற் கிடப்பதோர் பொருள் வேறுபாடு காட்டுவது.
>
> (தொ.பொ.656, உரை)

என விளக்குகிறார். பேராசிரியர்,

> *உத்தி என்பது, நூல் செய்யுங்கால் இயல்பு வகையாகிய வழக்கும் செய்யுளும் போலச் செவ்வனஞ் சொல்லுதல் ஒண்மை உடைத்தன்றாம்.*
>
> (தொ.பொ.656, உரை)

எனக் கூறுகிறார்.

*தொல்காப்பியத்திற்குப்* பின் வந்த இலக்கண நூலான *நன்னூல்,*

**நூற்பொருள் வழக்கொடு வாய்ப்பக் காட்டி**
**ஏற்புழி யறிந்து இதற்கிவ்வகை யாமெனத்**
**தகும் வகை செலுத்துதல் தந்திர உத்தி (15)**

எனக் கூறுகிறது. இதன் உரையில் சங்கரநமச்சிவாயர்,

*ஓர் இலக்கண நூலால் உணர்த்தப்படும் பொருளை நூல் வழக்கோடும் உலக வழக்கோடும் பொருந்த உணர்த்தி, அப்பொருளை மற்றோர் இலக்கிய நூற்கண்ணும் ஏற்குமிடம் அறிந்து இவ்விடத்திற்கு இஃதாமெனக் கருதித் தக்க வகையாகச் செலுத்துதல் தந்திர உத்தியாம்.*

என்றும் ''தந்திரம் என்பது நூல்'' எனவும் கூறியுள்ளார். இதனை இவர்க்குப்பின்வந்த இதன் உரையாசிரியர்களும் வழிமொழிந்துள்ளனர். மற்றோர் இலக்கண நூலான *சுவாமிநாதம்,*

முப்பான் இரண்டும்
இடஞ்செய நூற்பொருள் வழக்கொடு உணர்த்தி ஏற்புழி
**ஓர்ந்து இதற்கிதாம் எனச் செலுத்துந் தந்திர உத்திகளே. (11)**

என *நன்னூலின்* கருத்தையே குறிப்பிடுகிறது. மொழியியல் அறிஞரான செ.வை. சண்முகம்,

*இலக்கண உத்தி என்பது இலக்கணம் கூறும்போது ஆசிரியர் கையாண்ட வழிமுறைகளைக் கூறுவது, நூலின் பொது அமைப்பு, உட்பிரிவு, ஒவ்வொரு செய்தியையும் சொல்லும்முறை, போன்றவற்றை விளக்கும்*[20]

எனக் கூறியுள்ளார்.

*உத்தியெனப்படுவது முதற்நூற் பொருளின் உரை விளக்கத்தை, உலக வழக்கோடும் செய்யுள் வழக்கோடும் பொருந்தும் வகையில் திட்பமாகத் திறனுறப் புரிந்து கொள்வதற்குத் துணையாக ஆசிரியர் ஒருவரோ பலரோ கண்ட நுண்ணிய கருவியாகும்.*[21]

என ஆபிரகாம் அருளப்பன் குறிப்பிடுகிறார்.

உரையாசிரியர்கள், அவர்களின் பின் வந்த அறிஞர்கள் அனைவரும் கூறும் உத்திக்கான வரையறையிலிருந்து அவர்கள் அதன் இலக்கியப் பொருளையோ அகராதிப் பொருளையோ கணக்கில் எடுத்துக்கொள்ளாமல், இலக்கணப் பொருளையே கருதினர் என்பதை அறியமுடிகிறது. ஆனால் உத்தியின் பயன்பாடு இலக்கணத்தில் நூற்பொருள் அறிதல் அல்லது நூல் பொருள் உரைத்தல் என்பதோடு மட்டும் நின்றுவிடாமல், அணி யிலக்கணத்திலும் பிறதுறைகளிலும் பரவியுள்ளதை அறியமுடிகிறது.

**உத்தி: பிற துறைகள்**

**உத்தியும் அணியும் :** சில இலக்கண நூல்கள் உத்தியை அணியாகக் கூறியுள்ளன. *வீரசோழியம்,*

> தந்திர உத்தி குணம் மதமே உரை தர்க்கம் தன்னில்
> வந்து இயல் எண்கோண் முதலாய் உள மாலைமாற்று முன்னா
> வந்து இயல் சித்திரம் என்று இன்னவும் அலங்காரம் என்றே
> தந்து இயலச் சிலர் சொன்னார் அவற்றையும் சார்ந்து அறியே
> (178)

எனச் 'சிலர் கூறுவதாகக்' கூறுகிறது.

இதற்குக் கருத்துரை வழங்கிய ச.வே.சுப்பிரமணியன்,

> *தந்திர உத்தி, குணம், மதம், உரை, தர்க்கம் எண்கோள் முதலானவும் மாலை மாற்று முதலிய சித்திரம் என்பனவும் அலங்காரம் எனச் சிலர் சொன்னார். அவற்றையும் சார்ந்து அறி*[22]

என விளக்கியுள்ளார். 'சிலர் கூறுவதாகச்' சொல்வதால் அக்கருத்து இவ்விலக்கண நூலிற்கு உடன்பாடில்லை என்பதை உணர முடிகிறது. காரணம் இந்நூல் வடமொழித் தண்டியின் வழிநூலாக அமைந்தமையேயாகும். இதனை,

> *தண்டியைப் பின்பற்றி முப்பத்தைந்து அணிகள் கூறுகின்றது வீரசோழியம். பெயர் நிலை வேறுபாடுகள் உண்டு. மூலநூல் ஒன்றேயாயினும் பெயர்ப்புத் தன்மையால் இது ஏற்பட்டது எனலாம்.*[23]

எனச் ச.வே. சுப்பிரமணியன் குறிப்பிடுவதால் அறியமுடிகிறது. *மாறனலங்காரம்,* அணிகளில் ஒன்றாகத் 'தடுமாறு உத்தி' என்பதைக் கூறுகிறது.

உரைதடுமாறுவது தடுமாறுத்தி (மாற.205)

என்பது நூற்பா. இதன் உரையில்,

> *வைத்தமுறையானே தடுமாறுத்தியலங்கார முணர்த்திற்று. ஒரு காரணத்தினான தொரு காரியமே, அக்காரியத்தாற் றோற்றமான தக்காரணமென உரைதடுமாறக் கூறுவது தடுமாறுத்தி யலங்காரமாம் என்றவாறு. உத்தி– உரை (மாற.205,உரை)*

என விளக்கப்பட்டுள்ளது. சந்திராலோகமும் குவலயானந்தமும் 'யுக்தி அணி' என ஒன்றைக் குறிப்பிடுகின்றன.

> உட்கோள் மறைத்தற்கு உன்னிப் பிறரைச்
> செயலான் வஞ்சனை செய்தலே உத்தி. (சந்தி.115)
>
> தன்னம் தரங்கம் தனையே மறைக்கத் தகு தொழிலான்
> மன்னும் பெயரை வஞ்சித்திடல் உத்தி மகிப நினைக்
> கன்னி வரை கையில் மற்றோரைக் கண்டு கையில் மலர்வில்
> லின் உருத் தீட்டினள் என்பது இலக்கியம் எட்டமனே.''
> (குவல.148)

என்பன அந்த 'யுக்தி அணியைக்' குறிப்பிடும் நூற்பாக்கள். நிர்மல் செல்வமணி, *தொல்காப்பிய உத்திகள்* சிலவற்றின் பெயர்களைக் குறிப்பிட்டு அவற்றை அணிகளோடு பொருத்திக் காட்டுகிறார்.

| *காட்சித் துறை* | *அணி* |
|---|---|
| வாராததனால் வந்தது முடித்தல் | அபாவ ஏது |
| தொகுத்துக் கூறல் | சமுச்சய உவமை |
| ஞாபகம் கூறல்ஞ | ாபக ஏது |
| உய்த்துக்கொண்டுணர்த்தல் | உய்த்தலின் பொருண்மை |
| எதிர்பொருளுணர்த்தல் | மறுபொருள் உவமை[24] |

இவற்றில் காட்சித் துறை என்பது தருக்கவியலுடனும் தொடர்புடையது என்பதை அறியமுடிகிறது.

## பிற துறைகள்

ந.ரா.முருகவேள், 'ஒத்த காட்சி' எனத் தொடங்கும் *தொல்காப்பிய* நூற்பாவைச் சுட்டிக் காட்டித்,

> *தொல்காப்பியனார் காலத்திற்கும் முன்பிருந்தே தமிழ் நாட்டில் தருக்க நூற் கலைப் பயிற்சி மிகவும் சிறந்து விளங்கிவந்துள்ள திறனை, இந்நூற்பா வினால் நாம் செவ்விதிற்றெளியலாம்*[25]

எனக் கூறியுள்ளார். தருக்கவியலோடு மட்டுமன்றி, பிற துறைகளும் உத்தியோடு தொடர்பு உடையன என்பதை,

> *இன்று தனித்தனி துறைகளாகக் கருதும் வழக்காட்டியல் (சட்டவியல்), பொருள் கோளியல் (Hermeneutics), பொருள் விளக்கவியல் (Commentary), சொற்பொழிவுக் கலை (Rhetoric/ Oratory), கட்டுரை (Essay), அணியியல் (Figures of Speech), திறனாய்வியல் (Criticism) ஆகியவை காட்சியியலுள் அடங்கியவையே.*
>
> *பிறன்கோள்கூறல், மறுதலைச் சிதைத்துத் தன் துணிபு உரைத்தல், தன்கோள் கூறல் என்ற உத்திகள் வழக்காட்டிற்கு உரியன. அறங்கூறவையில் சிறந்த இவ்வுத்திகள் பின்னர்ச் சட்டவியல் என்றவொரு தனித்துறையாகப் பிரிந்து வடிவமைந்தது...*
>
> *காட்சியியல் உத்திகளுள் பொருள்கோள் உத்திகளும் உள. நுதலியது அறிதல், பல்பொருட்கு ஏற்பின் நல்லது கோடல், எதிர்பொருள் உணர்த்தல், சொல்லின் எச்சம் சொல்லியாங்கு உணர்த்தல் போன்ற உத்திகளை நோக்குக.*
>
> *மூல நூலுக்கு வரையும் விளக்கம், 'நுதலியது அறிதல்' போன்ற உத்தியினடி வகுக்கப்பெறுவதே. வழக்காட்டு நெறிப்படி மட்டும் அன்றி, ஏதுவும் எடுத்துக் காட்டும் தந்து காண்டிகை முறையில் சொற்பொழிவைக் கட்டுரையாக அமைத்து நிகழ்த்துவதும் காட்சியின்பாற்படுவதே.*[26]

என்னும் நிர்மல் செல்வமணியின் கருத்து உத்தியின் பல துறை தொடர்பைக் காட்டுகிறது. இவ்வாறு உத்தி என்பது இலக்கணப் பொருள் புலப்பாட்டிற்கு உரியதாக மட்டுமன்றி, பிற துறைகளிலும் பயன்பட்டுப் பொருள் விரிவு பெற்றுள்ளது.

## உத்தி: தமிழிலும் வடமொழியிலும்

*தொல்காப்பியத்தில்* 'உத்தி' குறித்த நூற்பா உரையில் இளம்பூரணர், அதனை

**உத்தி என்பது வடமொழிச் சிதைவு (தொ.பொ.656)**

எனக் குறிப்பிடுகிறார். 'யுக்தி' என்பதன் சிதைவாக 'உத்தி' என்னும் சொல்லைத் தொல்காப்பியர் தமிழில் ஆண்டுள்ளார் என இளம்பூரணர் கருதியுள்ளார். தமிழ் இலக்கண மரபுப்படி யகர உகரமான 'யு' என்னும் எழுத்துத் தமிழில் மொழிமுதலில் வராது.

**ஆவொடு அல்லது யகரம் முதலாது (தொ. எ. 65)**

என்பது *தொல்காப்பிய* நூற்பா. அதேபோல் ககர மெய்யை அடுத்து அதன் உயிர்மெய் எழுத்தே இடம்பெறும். இதனை 'உடனிலை மெய்ம் மயக்கம்' என்பர். அதாவது, ககர மெய், தன்மெய்யோடு மட்டுமே வரும். அதனால் 'யுக்தி' என்னும் சொல் 'உத்தி' எனச் சிதைந்து தமிழில் வழங்கியதாக இளம்பூரணர் கொண்டார். வாழ்வியற் களஞ்சியம்

> *உத்திகள்: உத்தி என்பது இலக்கண நூல்களில் (தொல். மரபு. 100, 112; நன்னூல் 14, 15) காணப்படும் கூறாகும். நூலிலக்கணம் ஐந்தனுள் ஒன்றாக இதனைத் தொல்காப்பியர் குறித்துள்ளார் (மரபு.100). இச்சொல் வடசொல்லின் சிதைவாகும்...*[27]

என இளம்பூரணரை வழிமொழிகிறது.

*மணிமேகலையைப்* பதிப்பித்த உ.வே.சாமிநாதையர், இளம்பூரணர் கருத்தைப் பின்பற்றியவர். இரா. இராகவையங்கார், வையாபுரிப்பிள்ளை ஆகியோர் வடமொழி நூலைப் பார்த்தே தொல்காப்பியர் உத்திகளைத் தம் நூலில் எழுதினார் என்னும் கருத்தினர். ஆனால் அவர்கள் உத்தி என்பது வடசொல்லா தமிழ்ச் சொல்லா என்பது பற்றி ஏதும் கூறவில்லை. தொல்காப்பியர் காலத்தால் முந்தையவர் என்னும் வெள்ளைவாரணன் உத்தியை வடசொல்லாகவே கருதுகிறார். இதனை,

> *உத்தி என்னும் சொல் வடசொல்லாயினும் தொல்காப்பிய மரபியலில் உத்தி என்னுஞ் சொல்லாற்*

> *குறிக்கப்படும் நூற்புணர்ப்பாகிய முறைமை தமிழிலக்கண நூற்களுக்குரிய சிறப்புடையது.*[28]

என்னும் பகுதி காட்டுகிறது. இவர் கருத்தை அணி செய்வதுபோல் சி.இலக்குவனார்,

> *சூத்திரம் என்ற சொல்லும், உத்தி என்ற சொல்லும், தாம் இடையில் புகுத்தப்பட்ட தன்மையை எளிதே புலப்படுத்துகின்றன*[29]

எனக் கூறுகிறார். இவர் 'இடையில் புகுத்தப்பட்டது உத்தி' எனக் கூறுவதால், அது *தொல்காப்பியச்* சொல்லாட்சிக்கும் அவர் காலத்திற்கும் உரியதன்று எனக் கருதுவதும் அவ்வாறு கருதுவதற்கு அது வடசொல் என இவர் கொண்டமையே காரணம் என்பதும் புலனாகிறது.

இவர்களுக்கு எதிர்நிலையில் உத்தி என்பது தமிழ்ச் சொல் என அறிஞர்கள் சிலர் கருதுகின்றனர். *செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகர முதலி,* 'உந்து' என்னும் வேர்ச்சொல்லிலிருந்து உத்தி என்பது வந்தது என்பதை,

> *உ – உந்து= சேர்த்துக் கட்டு, பொருந்து. மாடுகளைச் சேர்த்துக் கட்டும் கயிறு உத்தாணி எனப்படுதல் நோக்குக. புணர்ப்பு, பொருத்தம், பொருத்துமானதை அறியும் அகக்காரணம். நூற்கும் உரைக்கும் பொருந்தும் நெறிமுறை 'உத்தி'. இதில் 'உத்' என்னும் செயற்கையடியை வடமொழியார் 'யுத்' என்று திரிப்பர்*[30]

எனக் காட்டுகிறது. உத்தி என்பது தமிழ்ச் சொல்லே என்னும் கருத்துடைய சிவலிங்கனார்,

> *'உத்தி' என்பது 'உய்' என்பதன் அடியாக வந்தது. உய் – செலுத்து. உய்க்கப்படுவது உய்த்தியாயிற்று. அது உத்தி என நின்றது. உய்க்கப்படுவது அறிவு. அதனால் அது உத்தி எனப்பட்டது. அகர விகுதி அலரி என வினைமுதற் பொருளிலும் மண்வெட்டி எனக் கருவிப் பொருளிலும், உண்டி எனச் செயப்படு பொருளிலும் வரும். அந்நிலையில் அறிவு உய்க்கப்படுதலின் (செயப்படு பொருள் நிலையில்) உய்த்தி எனப்பட்டது. உய்த்தி என்பதே யுக்தி எனத் திரித்துக்கொள்ளப்பட்டது.*

> *அறிவையுணர்த்தும் உத்தி என்பது அறிவினால் கூர்ந்து காணப்பட்டதற்குப் பின்னர் ஆயிற்று. அறிவினால் காணப்பட்ட யாவும் உத்தி எனினும் இலக்கண நூலில் காணப்படும்— உய்த்துணரப்படும் நுதலியறிதல் முதலியவற்றுக்கே உரிமையாக்கப் பட்டது.*[31]

என 'உய்' என்னும் வேர்ச் சொல்லடியாக உத்தி தோன்றியது எனக் குறிப்பிடுகிறார். 'உய்' என்னும் வேர்ச்சொல்லிலிருந்து 'உத்தி' வந்தது என்பதை ஏற்காத நிர்மல் செல்வமணி,

> *'உய்' – என்பதைக் காட்டிலும் உத் – என்பதே உத்திக்குரிய இயல்பான அடிச்சொல்லாகக் கொள்ளத்தக்கது என்பதால், பின்னதே ஏற்றற் குரியது.*
>
> *'உத்தி' என்பது வட சொல் என மயங்கவேண்டாம். யுஞ் – என்ற வடசொல், 'சேர்' என்று பொருள்படுவது. அதற்கு இனமான இந்தோ–ஐரோப்பிய வேர்ச்சொற்களை மோனியர் வில்லியம்சு காட்டுகின்றார். ஆனால் யுக்தி என்று வட மொழியில் வழங்கும் சொல் யுஞ் – என்பதோடு தொடர்புடையது என வில்லியம்சு இணைத்துக் காட்டினாரிலர். யுஞ் – என்ற அடியினின்று தோன்றியது என்ற முற்கோளைக் கொண்டிருப்பினும் அதனை விளக்கிக் காட்டினாரிலர். யுஞ்–என்பதற்கும் யுக்தி என்பதற்கும் உறவின்மையே இதன் காரணம் என நாம் ஊகிக்கலாம். இவற்றை வலிந்து இணைத்துக் காட்டுவாரும் உளர். அவர் கூற்றிற்குச் சான்றுகள் இல.*
>
> *இனி, யுஞ் – என்பதனின்று யுக்தி பிறந்ததன்று எனக் கொண்டால், யுஞ் என்ற வேர்ச்சொல் யுக்திக்குப் பொருந்தாது. மேலும், உத்– என்ற திராவிட வேர்ச்சொல்லினடிப் பிறந்த பல திராவிடச் சொற்கள் உள. உத்தி, விளையாட்டில் எதிரி; ஒ.நோ.: தெலு. உத்தி (uddi); உத்திஞ்சு (uddincu); இணை, கன். உத்தி (uddi). இனி, உயர்வு எனப் பொருள்படும் உத்த (udda) என்ற கன்னடச் சொல்லும் உத்ம்*

> *(udm) என்ற கோட்டாச் சொல்லும், உத்த (udda) என்ற குடகுச் சொல்லும் உத் – என்ற திராவிட வேரினின்று கிளைத்தனவே. அவ்வாறே உந்து எனப் பொருள்படும் மலை. உந்துக, உந்து; உந்திக்க; கோட்டா: உத் (ud-) உத்ய (udy-); தோடா: உத் (ud), உத்ய (udy-) என்ற சொற்களும் உத்– என்ற திராவிட வேரினின்று கிளைத்தனவே.*[32]

என *Burrow & Emeneau, A Dravidan Etymological Dictionary*–ஐ மேற்கோள் காட்டி உத்தி, உத்– அடியாகப் பிறந்த தமிழ்ச் சொல்லே எனக் கூறுகிறார்.

இவ்வாறு எதிர் எதிர் நிலையில் நின்று இருவேறு அணியினர் உத்தி என்னும் சொல் தமிழுக்கு உரியது என்றும் வடமொழிக்கு உரியது என்றும் கருத்தறிவித்துள்ளனர். வடநூலாரைப் பார்த்துத் தொல்காப்பியர் உத்திகளை எழுதினார் என நிறுவினாலே அது வடசொல் என்னும் கருத்து வலிவுடையதாகும். அதை முற்றும் உறுதிப்படுத்தாத வரை உத்தியைத் தமிழ்ச் சொல் எனக் கொள்வதே பொருத்தமாகும். இதனை உறுதி செய்வதற்குத் தொல்காப்பியத்திலும் வடமொழியிலும் காணப்படும் உத்திகளை ஒப்பிட்டுக் காண்பது தேவையாகிறது.

*தொல்காப்பியம் – கௌடில்யம் – சரக சமிதை –* ஆகியவற்றில் காணலாகும் உத்திகள்

| தொல்காப்பியம் | கௌடில்யம்[33] | சரக சம்கிதை[34] |
|---|---|---|
| 1. நுதலியதறிதல் | அதிகரணம் | அதிகரணம் |
| 2. அதிகாரமுறை | விதானம் | யோகம் |
| 3. தொகுத்துக்கூறல் | யோகம் | ஹேத்வர்த்தம் |
| 4. வகுத்து மெய்ந்நிறுத்தல் | பதார்த்தம் | பதார்த்தம் |
| 5. மொழிந்த பொருளோடு ஒன்றவைத்தல் | ஹேத்வர்த்தம் | பிரதேசம் |
| 6. மொழியாததனை முட்டின்று முடித்தல் | உத்தேசம் | உத்தேசம் |
| 7. வாராததனான் வந்தது முடித்தல் | நிர்தேசம் | நிர்தேசம் |
| 8. வந்தது கொண்டு | உபதேசம் | வாத்தியஷேசம் |

| | | | |
|---|---|---|---|
| 9. | முந்து மொழிந்ததன் தலை தடுமாற்று | அபதேசம் | பிரயோஜனம் |
| 10. | ஒப்பக் கூறல் | அதிதேசம் | உபதேசம் |
| 11. | ஒரு தலைமொழி | பரதேசம் | அதிதேசம் |
| 12. | தன்கோள் கூறல் | உபமானம் | அர்த்தாபத்தி |
| 13. | உடம்பொடு புணர்த்தல் | அருத்தாபத்தி | நிர்ணயம் |
| 14. | பிறன் உடன்பட்டது தான் உடன்படல் | சம்சயம் | பிரசங்கம் |
| 15. | இறந்தது காத்தல் | பிரசங்கம் | ஏகாந்தம் |
| 16. | எதிரது போற்றல் | விபர்யயம் | அனேகாந்தம் |
| 17. | மொழிவாமென்றல் | வாக்யசேஷம் | அபவர்க்கம் |
| 18. | கூறிற்றென்றல் | அநுமதம் | விபர்யயம் |
| 19. | தான் குறியிடுதல் | வியாக்யாணம் | பூர்வபக்ஷம் |
| 20. | ஒருதலையன்மை முடிந்தது காட்டல் | நிர்வசனம் | விதானம் |
| 21. | ஆணைகூறல் | நிதர்சனம் | அநுமதம் |
| 22. | பல்பொருட் கேற்பின் நல்லது கோடல் | அபவர்கம் | வியாக்யானம் |
| 23. | தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல் | சுவசம்ஞா | சம்ஷயம் |
| 24. | மறுதலைச் சிதைத்துத் தன்துணிபுரைத்தல் | பூர்வ பக்ஷம் | அதீதம் |
| 25. | பிறன் கோட்கூறல் | உத்தர பக்ஷம் | அனாஷிதாபேக்ஷா |
| 26. | அறியாதுடம்படல் | ஏகாந்தம் | சசம்ஞா |
| 27. | பொருளிடையிடுதல் | அனாகதாவேக்ஷனம் | சமுச்சயம் |
| 28. | எதிர்பொருளுணர்த்தல் | அதிகிரந்தவேக்ஷனம் | நிதர்சனம் |
| 29. | சொல்லின் எச்சம் சொல்லியாங்குணர்த்தல் | நியோகம் | நிர்வசனம் |
| 30. | தந்து புணர்ந்துரைத்தல் | விகல்பணம் | சன்னியோகம் |
| 31. | ஞாபகங்கூறல் | சமுச்சயம் | விகல்பனம் |

| 32. | உய்த்துக்கொண்டுணர்தல் | ஊஹ்யம் | பிரத்தியுக்காரம் |
|---|---|---|---|
| 33. | ....... | ...... | உதாரணம் |
| 34. | ....... | ...... | சம்பவம் |

மேற்கண்ட பட்டியல், *அர்த்தசாத்திரம், சரக சம்கிதை* ஆகிய இரு நூல்களின் உத்திகள் ஒன்றோடு ஒன்று வரிசை முறை வைப்பிலும், பெயரிலும், எண்ணிக்கையிலும் ஒத்துப் போகாமையை வெளிப்படுத்துகிறது. *அர்த்தசாத்திரம்* 32 உத்திகளைக் குறிப்பிடும் நிலையில் *சரக சம்கிதை* 34 உத்திகளைக் குறிப்பிடுகிறது. சதீஷ் சந்திர வித்தியா பூஷணர்,

*சரக சம்கிதை* கீழ்க்கண்ட உத்திகளையும் சேர்த்து 34 உத்திகளைக் குறிப்பிடுகிறது என்கிறார். அவை:

1. பிரயோஜனா (நோக்கம்)
2. நிர்ணயா (முடிவெடுத்தல்)
3. அனேகாந்தா (உறுதியின்மை)
4. பிரத்யுக்காரா (மீண்டும் கூறல்)
5. உதாரா (எடுத்துக் காட்டு)
6. சம்பவா (வாய்ப்பு)[35]

எனக் கூறுவதிலிருந்து *சரக சம்கிதையில்* புதிதாக ஆறு உத்திகள் சேர்க்கப்பட்டு, *அர்த்த சாத்திரத்திலுள்ள* உத்திகளில் நான்கு நீக்கப் பட்டுள்ளன என்று அறியமுடிகிறது. ஆனால் *அர்த்த சாத்திரத்திலுள்ள* உத்திகளில் 1.அதிக்கிரந்தா வேட்சனம், 2.அபதேசம், 3. உத்தரபக்கம், 4. உபமானம், 5.ஊஹ்யம், 6.நியோகம் ஆகிய ஆறும் *சரக சம்கிதையில்* காணப்பெறவில்லை. *சரக சம்கிதையில்* உள்ள 1.நிர்ணயம், 2.அனேகாந்தம், 3.அதீதம், 4.சன்னியோகம், 5.பிரத்தியுக்காரம், 6.உதாரணம், 7.சம்பவம், 8.பிரயோஜனம் ஆகிய எட்டும் *அர்த்தசாத்திரத்தில்* காணப்பெறவில்லை. அதேபோல் *தொல்காப்பிய, அர்த்தசாத்திர* நூல்களின் பட்டியலும் ஒத்துப் போகவில்லை. இதனை வெள்ளைவாரணன்,

> *தொல்காப்பிய மரபியலிற் காணப்படும் முப்பத்திரண்டுத்திகளுக்கும் கௌடலீயத்திலுள்ள முப்பத்திரண்டுத்திகளுக்கும் சொல்வகையாலும் கருத்து வகையாலும் வேறுபாடுகள் உள்ளன.*

*இறந்தது காத்தல், எதிரது போற்றல், மொழிவாமென்றல், அறியாதுடன்படல் எனத் தொல்காப்பியத்திலுள்ள உத்திகளுக்கு ஒத்த வடமொழிப் பெயர்களைத் தேடிக்காண முடியவில்லை. முந்து மொழிந்ததன் தலைதடுமாற்றம் என்றதனை 'அபவர்க்கம்' என்றும், கூறிற்றென்றலைப் 'பிரதேசம்' என்றும், பல்பொருட்கேற்பின் நல்லது கோடலை 'விகற்பம்' என்றும், பிறன் கோட்கூறலைப் 'பூருவபக்கம்' என்றும், எதிர்பொருளுணர்த்தலை 'வியர்யயம்' என்றும், ஞாபகங் கூறலை 'அபதேசம்' என்றும், அவர்கள் குறிப்பிட்டிருப்பது அவ்வுத்திகளின் பொருளியைபுக்கு முற்றிலும் மாறுபடுகிறது. எனவே இவ்வுத்திகளிற் பெரும்பாலான ஒத்திருப்பனவாக மகாவித்துவான் இராகவையங் காரவர்கள் கூறியிருப்பது காப்பிய மரபியலிலும் கௌடலீய அர்த்தசாத்திரத்திலும் இடம்பெற்றுள்ள உத்திகள் முப்பத்திரண்டுத்தி என்னும் தொகையளவில் ஒத்தனவாயினும் அவற்றின் இலக்கண அமைப்பில் வேறுபட்டனவாகவேயுள்ளன. இவ்வேறுபாட்டினை யுளங் கொண்ட மகாவித்துவான் ஐயங்காரவர்கள் இவ்வுத்திகள் வடமொழி நூலைப் பின்பற்றியே அமைந்திருத்தல் வேண்டும் என்றும் தமது கொள்கையை வற்புறுத்தும் கருத்தினராய் இவ்வுத்தி வகையில் 'தொல்காப்பியர்க்கும் கௌடலீயர்க்கும் ஒத்த முதனூல் இஃதென்று இன்னுந் துணிதற்கில்லை' யென்றும் 'ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்' எனப் பாயிரங் கூறுதலால் அவ்வைந்திரத்தேனும் அதன் வழித்தாகிய பிறிதொரு நூலிலேனும் இவ்வுத்திகள் உள்ளனவென்று நினைக்கப்படும்' என்றும் ஐயுறுகின்றார்.''*[36]

என *அர்த்தசாத்திர* உத்திகளும் *தொல்காப்பிய* உத்திகளும் வெவ்வேறானவை என்பதற்கான காரணங்களை முன்வைக்கிறார்.

*தொல்காப்பியம், அர்த்தசாத்திரம், சரக சம்கிதை* முதலிய காலத்தால் பழமையான நூல்களில், உத்திகளின் பட்டியல் காணப்படினும் வெள்ளைவாரணன் கூறுவது போன்று அவை வெவ்வேறானவை, முற்றிலும் ஒத்துப்போகாதவை என்பது

பெறப்படுகிறது. எனவே, '*அர்த்த சாத்திரத்தைப்* பார்த்தோ, பிற வடமொழி நூல்களைப் பார்த்தோ *தொல்காப்பிய உத்திகள்* கூறப்பட்டன' என்பதும் பொருந்தாது.

## தொகுப்புரை

இப்பகுதியில் ஆராயப்பட்ட கருத்துகளிலிருந்து பெறப்படுவன:

1. *தொல்காப்பியத்தின்* இறுதி நூற்பா 32 உத்திகளைக் குறிப்பிடுகிறது. இந்நூற்பாவையும் இவ்வியலில் உள்ள வேறு சில நூற்பாக்களையும் இடைச்செருகல் என்றும் அன்று என்றும் அறிஞர் கருதுகின்றனர். சான்றுகள் அடிப்படையில், 32 உத்திகளுக்கு உரிய நூற்பா, *தொல்காப்பியத்திற்கு* உரியதாகக் கொள்ளப்படுகிறது.

2. *தொல்காப்பியத்தின்* காலத்தை முடிவு செய்வதற்கு உத்தியை அறிஞர்கள் சிலர் பயன்படுத்துகின்றனர். அவர்கள் '*தொல்காப்பிய* உத்திகள் *அர்த்த சாத்திரத்தையோ,* வேறு வடமொழி நூலையோ பார்த்து எழுதியதாகும். அதனால் தொல்காப்பியர் காலம் கி. பி. 3–ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டது ' என்கின்றனர். இக்கருத்தை மறுக்கும் அறிஞர்கள் *தொல்காப்பியத்தைப்* பார்த்தே *அர்த்த சாத்திரம்* முதலியன எழுதியிருக்க வேண்டும் என்றும் *அர்த்த சாத்திரம்* எழுதிய கௌடில்யர் தமிழ் நாட்டில் வாழ்ந்தார் என்றும் குறிப்பிடுகின்றனர். இவற்றின் அடிப்படையில், *தொல்காப்பியம், பாணினியத்திற்கு* முற்பட்டது என இப்பகுதியில் கருதப்படுகிறது.

3. உத்தி என்னும் சொற்பொருளின் இலக்கணப் பார்வை ஒன்றாகவும் இலக்கியப் பார்வை வேறொன்றாகவும் அமைந்துள்ளது. இன்றைக்கு உத்தி என்னும் சொல்லுக்குரிய தொழில்நுட்பம் என்னும் பொருளோடு இலக்கணிகளின் கருத்தே பொருந்துகிறது.

4. உத்தி வட சொல்லின் திரிபு என்றும் தமிழ்ச் சொல்லே என்றும் அறிஞர் பல்வேறு சான்றுகளைக் காட்டி வாதிடுகின்றனர். தமிழுக்குரிய சொல்லாக உத்தியை இப்பகுதி இனங்காண்கிறது.

5. ''நூலாசிரியன் கூறிய கருத்தை அறிவதற்கான பொருளுணர் முறை உத்தி'' என உரையாசிரியர் முதலியோர் பொருள் வரையறை செய்யினும் காலத்திற்கேற்ற கருத்து வளர்ச்சியின் காரணமாக உத்தி 28 வகையான பொருள்களைக் குறிப்பதாக அகராதிகள் காட்டுகின்றன.

6. உத்தியின் பயன்பாடு தமிழ் இலக்கண இலக்கியங்களோடு மட்டுமல்லாமல் தருக்கவியல் போன்ற துறைகளிலும் காணப்படுகிறது.

7. வடமொழியில் காணப்படும் உத்திகளின் பட்டியலுக்கும் *தொல்காப்பிய* உத்திகளின் பட்டியலுக்கும் பொருள் நிலையிலும் பயன்பாட்டு நிலையிலும் வேறுபாடுகள் காணப்படுகின்றன. இவற்றின் அடிப்படையில், உத்திகள், *தொல்காப்பியத்திற்கே* உரியதென்பதும், உத்தி பற்றிய சிந்தனை தமிழில் தொன்று தொட்டு இடம்பெற்றுள்ளது என்பதும் உறுதியாகிறது.

## அடிக்குறிப்புகள்

1. ஆபிரகாம் அருளப்பன், ''தொல்காப்பிய உத்திகள்'', தொல்காப்பியக் கருத்தரங்கு, பக். 17, 18.
2. க. வெள்ளைவாரணன், *தமிழ் இலக்கிய வரலாறு, தொல்காப்பியம்,* ப. 300.
3. சி. இலக்குவனார், *தொல்காப்பிய ஆராய்ச்சி,* ப. 219.
4. ம. சத்தியமூர்த்தி, *தொல்காப்பிய மரபியல்—ஓர் ஆய்வு,* ப. 91.
5. சின். சோதிஸ் பொறியாள், *தொல்காப்பியத்தில் சாதி நெறி,* ப. 2.
6. க வெள்ளைவாரணன், மு.நூ., ப. 126.
7. கா. சுப்பிரமணிய பிள்ளை, *இலக்கிய வரலாறு,* முதற்பாகம், பக். 59—61.
8. க. வெள்ளைவாரணன், மு.நூ., ப. 105.
9. மேற்.
10. க. வெள்ளைவாரணன், (ஆ.ரை.), *தொல்காப்பியம்,* பொருளதிகாரம் (உரைவளம்), மரபியல், ப. 247.
11. எஸ். வையாபுரிப்பிள்ளை, *தமிழ்ச்சுடர் மணிகள்,* ப. 51.
12. க. வெள்ளைவாரணன், மு.நூ., பக். 247, 248.
13. ந. ரா. முருகவேள், *தருக்க இயல் விளக்கம்,* பக். 115, 116.
14. Satish Chandra Vidyabhusana, *A History of Indian Logic,* p.24.
15. சி. கி. கதிரைவேல் பிள்ளை, *தமிழ்ச் சொல்லகராதி,* ப. 536.

16. சுன்னாகம், ஆ. குமாரசுவாமிப்பிள்ளை, *இலக்கியச் சொல்லகராதி,* ப.33.
17. *Tamil Lexicon,* Vol. I, P. 410.
18. வை. பழனிச்சாமி (மு. ப. ஆ.), *செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகர முதலி,* முதன் மடலம்–மூன்றாம் பாகம், (உ–ஔ), ப. 49.
19. *பெருஞ்சொல்லகராதி,* தொகுதி மூன்று, பக். 169, 170.
20. செ. வை. சண்முகம், ''தொல்காப்பியரின் சில இலக்கண உத்திகள்'', 5ஆவது கருத்தரங்க ஆய்வுக் கோவை, இ.ப.த.ம.,1973, ப. 541.
21. ஆபிரகாம் அருளப்பன், மு.நூ., ப. 1.
22. ச.வே.சுப்பிரமணியன், *வீரசோழியம்,* திறனாய்வு மூலமும் கருத்தும், ப.107.
23. மேற்., ப.39.
24. நிர்மல் செல்வமணி, *தமிழ்க் காட்சி நெறியியல்,* ப. 37.
25. ந. ரா. முருகவேள், மு.நூ., ப. 113.
26. நிர்மல் செல்வமணி, மு.நூ., ப. 36.
27. *வாழ்வியற் களஞ்சியம்,* தொகுதி நான்கு, ப.862.
28. க. வெள்ளைவாரணன், மு.நூ., பக். 247, 248.
29. சி. இலக்குவனார், மு.நூ., ப. 219.
30. வை. பழனிச்சாமி, மு.நூ., ப. 49.
31. கே. பகவதி, (ப.ஆ.), *தொல்காப்பியம்–பொருளதிகாரம்,* (உரைவளம்), மரபியல், ப. 180.
32. நிர்மல் செல்வமணி, மு.நூ., பக். 87, 88.
33. Satish Chandra Vidyabhusana, *A History of Indian Logic,* p.25.
34. Ibid.
35. Ibid.
36. க. வெள்ளைவாரணன், மு.நூ., ப. 247.

# உத்தி – உரைவேறுபாடுகள்

தொல்காப்பியத்தில் "உத்தி" என்னும் சொல் முதன் முதலாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பது முன்னர்க் கூறப்பட்டது. நூலின் இலக்கணம் கூறும் பகுதியில் எண்ணான்கு உத்தி எனக் குறிப்பிட்டு உத்திகளின் எண்ணிக்கை 32 என்பதைத் தொல்காப்பியர் அவர் தெளிவுபடுத்துகிறார்.

ஒத்த சூத்திரம் உரைப்பிற் காண்டிகை
மெய்ப்படக் கிளந்த வகையதாகி
ஈரைங் குற்றமும் இன்றி நேரிதின்
முப்பத் திருவகை உத்தியொடு புணரின்
நூலென மொழிப நுணங்குமொழிப் புலவர் (தொ.பொ.644)

என்னும் நூற்பா இதனைக் காட்டுகிறது. இப்பகுதி *தொல்காப்பியம்* சுட்டும் 32 உத்திகள் அவற்றில் உரையாசிரியர்களுக்கிடையே காணப்படும் வேறுபாடு ஆகியனவற்றை ஆராய்கிறது. அதற்கேற்ப இப்பகுதி,

1. தொல்காப்பிய உரையாசிரியர்கள்
2. உத்தி: பெயர்வேறுபாடு
3. உத்தி: வரையறையும் வேறுபாடும்

என மூன்று தலைப்புகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

**தொல்காப்பிய உரையாசிரியர்கள்**

*தொல்காப்பியத்திற்கு* இளம்பூரணர், சேனாவரையர், தெய்வச்சிலையார், பேராசிரியர், கல்லாடனார், நச்சினார்க்கினியர், பெயர்தெரியாத ஒருவர் எனப் பழைய உரையாசிரியர் பலராய் உள்ளனர். இவர்கள் அனைவரின் உரையும் *தொல்காப்பியம்* முழுமைக்கும் கிடைக்கவில்லை. இளம்பூரணர் உரையே *தொல்காப்பியம்* முழுமைக்கும் கிடைக்கிறது. சேனாவரையர், தெய்வச்சிலையார், கல்லாடனார், பெயர் தெரியா ஒருவர் ஆகியோர் உரைகள் சொல்லதிகாரத்திற்கு மட்டும் கிடைக்கின்றன.

பேராசிரியர் உரை பொருளதிகாரத்தில் சில இயல்களுக்குக் கிடைக்கிறது. நச்சினார்க்கினியர் உரை மூன்று அதிகாரங்களுக்குக் கிடைத்தாலும், பொருளதிகாரத்து அனைத்து இயல்களுக்கும் கிடைக்கவில்லை. குறிப்பாக மரபியலுக்கு இளம்பூரணர், பேராசிரியர் இருவர் உரைகளே கிடைக்கின்றன. அவர்கள் உரைகளே வைத்தே 32 உத்திகளின் பொருள் விளக்கத்தைக் காண வேண்டியுள்ளது. அதற்கு முன் இவ்வுரையாசிரியர்கள் பற்றி அறிவது தேவையாகிறது.

**இளம்பூரணர்**

உரையாசிரியர் என்றாலே இளம்பூரணர் என்னும் அளவிற்குப் பழைய உரையாசிரியர்களாலேயே நன்கு மதிக்கப்பட்டவர் இவர். *தொல்காப்பியம்* முழுமைக்கும் இவர் எழுதிய உரையே இன்று கிடைக்கிறது. இவருக்கு முன்பும் *தொல்காப்பியத்திற்கு* உரை ஏதேனும் தோன்றியிருக்கும் என ஆய்வாளர்கள் கருதுகின்றனர். இளம்பூரணரே தமக்கு முன் வேறு சில உரைகள் *தொல்காப்பியத்திற்கு* இருந்ததைத் தம் உரையின் பல இடங்களில் சுட்டிக் காட்டுகின்றார். ஆனால் பிறர் கருத்தை மறுக்காமல், தாம் நினைத்த கருத்தை விளக்குவதிலேயே இவர் கவனம் செலுத்துகிறார். ஏனைய அதிகாரங்களைவிடச் சொல்லதிகாரத்தில் பல இடங்களில் இவர் பிறர் உரைகளை மிகுதியாகக் குறிப்பிடுகின்றார்.

இளம்பூரணருக்குப் பின் வந்த உரையாசிரியர்கள் சிலர் அவரது உரைகளைக் குறிப்பிடும் இடங்களில் சில இன்றுள்ள இளம்பூரணர் உரையில் காணப்படவில்லை. *மதுரைக் காஞ்சியுரையில்* நச்சினார்க்கினியர், "(தென் திசையை) இராவணன் ஆளுதல் பாயிரச் சூத்திரத்து உரையாசிரியர் கூறிய உரையானும் உணர்க"(40–42) என்று கூறுகின்றார். இங்கே நச்சினார்க்கினியர், உரையாசிரியர் என்று குறிப்பிடுவது இளம்பூரணரை எனின், பாயிரச் சூத்திர உரை என்பது, *தொல்காப்பியப்* பாயிரத்தைக் குறிக்க வேண்டும். ஆனால் இன்றுள்ள இளம்பூரணர் பாயிரச் சூத்திர உரையில் தென் திசையை இராவணன் ஆண்ட செய்தி கூறப்படவில்லை. ஆகவே உரையாசிரியர் என்று வேறு ஒருவரும் பழைய உரையாசிரியர்களின் உரையில் குறிக்கப்பட்டதையே இது காட்டுகிறது. அல்லது இளம்பூரணர் உரையிலும் பாடபேதமும் இடைச் செருகலும் இருந்திருக்க வேண்டும் என்பதை இது காட்டுகிறது. இளம்பூரணர் காலம் கி.பி. 11 ஆம் நூற்றாண்டென்பர்.[1]

**சேனாவரையர்**

*தொல்காப்பியச்* சொல்லதிகாரத்திற்கு உரைகண்ட புலவர் பெருமக்கள் ஐவர். இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார், கல்லாடனார் ஆகிய ஐவரும் சொல்லதிகாரத்திற்கு விரிவான உரை எழுதினர். இவர்களோடு பெயர் தெரியா ஒருவரின் உரையும் கிடைத்துள்ளது. இவ்வறுவரில் சேனாவரையர் உரையே இன்றுவரை புலவர் உலகம் போற்றும் பெருமையுடன் விளங்குகின்றது.

சேனாவரையர் என்ற சொல்லுக்குப் படைத்தலைவர் என்பது பொருள். சேனை+அரையர் எனப்பிரித்துப் படைத்தலைவர் என்று பொருள்கொள்வார் *நன்னூலின்* உரையாசிரியராகிய மயிலைநாதர். சேனாவரையர் என்பது இயற்பெயராகவும் கல்வெட்டுகளில் வழங்கியுள்ளது. *தொல்காப்பிய* உரையாசிரியரான இவரை ஆற்றூர்ச் சேனாவரையர் என்பர்.

“மாணாக்கர்க்கு உணர்வு பெருகல் வேண்டி வெளிப்படக் கூறாது உய்த்துணர வைத்தல் அவர்க்கு இயல்பாகலான்” (தொ.சொ.1 உரை)என்று முதற் சூத்திர உரை விளக்கத்திலேயே மாணாக்கரை இவர் நினைவுபடுத்துகின்றார். தம் உரையை, ஓர் ஆசிரியர் தம் மாணாக்கர்க்கு ஐயம் தெளிவித்தலாக, தடைவிடையாக அமையுமாறு எழுதிச் செல்கின்றார்.

சேனாவரையர் தமிழ் இலக்கணத்தில் தேர்ச்சி பெற்றிருப்பதைப்போலவே, வடமொழி இலக்கணத்திலும் வல்லவராக விளங்குகின்றார். இருமொழியிலும் வல்லவரான சிவஞான முனிவர், இவரை ‘வடநூற்கடலை நிலைகண்டு உணர்ந்த சேனாவரையர்’ என்று வாயாரப் புகழ்ந்து போற்றுகின்றார். அங்ஙனம் புகழ்வதற்கு ஏற்பச் சேனாவரையர், வடமொழி இலக்கண விதிகளை மேற்கோளாகக் காட்டுகின்றார்.

> *அதிகாரம் (1), ஞாபகம், அநுவாதம் (10), யோக விபாகம் (11), உத்தரம் (13), நேயம் (55), காரகம் (112), கரும கருத்தின் (246) ஆகிய வடமொழிக் கருத்துகளை அச்சொற்களைப் பயன்படுத்தித் தக்க இடங்களில் எடுத்தாண்டு விளக்கியுள்ளார்.*[2]

எனப் பாராட்டுகிறார் மு.வை. அரவிந்தன்

இவர் தம் சொத்துக்களைச் சிவன் கோயிலுக்கு வழங்கிய காலம் மாறவர்மன் குலசேகர பாண்டியனது ஏழாம் ஆட்சியாண்டாகிய கி.பி. 1275 ஆகும். இதிலிருந்து இவரது காலம் கி.பி. 13ஆம் நூற்றாண்டென்பதை உணர முடிகிறது.

**நச்சினார்க்கினியர்**

நச்சினார்க்கினியர் இலக்கணம், இலக்கியம் ஆகிய இரண்டிற்கும் உரை எழுதிய சான்றோர். பழம்பெரும் இலக்கண நூலாகிய *தொல்காப்பியம்,* சங்க இலக்கியத்துள் *பத்துப்பாட்டு,* கற்றறிந்தார் ஏத்தும் *கலித்தொகை, குறுந்தொகையில்* இருபது பாடல்கள், ஐம்பெருங்காப்பியங்களுள் ஒன்றான *சீவகசிந்தாமணி* ஆகிய நூல்களுக்கு நச்சினார்க்கினியர் சிறந்த உரை கண்டுள்ளார்.

> பாரத்தொல் காப்பியமும் பத்துப்பாட் டுங்கலியும்
> ஆரக் குறுந்தொகையுள் ஐந்நான்கும்—சாரத்
> திருத்தகு மாமுனிசெய் சிந்தா மணியும்
> விருத்திநச்சி னார்க்கினிய மே

என்ற வெண்பா, இவர் உரை கண்ட நூல்களைக் குறிப்பிடுகின்றது. இவற்றுள் *குறுந்தொகை* உரை இன்று கிடைக்கவில்லை.

நச்சினார்க்கினியர் வரலாற்றினை அறிய உரைச் சிறப்புப் பாயிரம் துணைபுரிகின்றது.

> வண்டிமிர் சோலை மதுரா புரிதனில்
> எண்டிசை விளங்க வந்த ஆசான்
> பயின்ற கேள்வி பாரத் துவாசன்
> நான்மறை துணிந்த நற்பொருள் ஆகிய
> தூய ஞானம் நிறைந்த சிவச்சுடர்
> தானே யாகிய தன்மை யாளன்
> நவின்ற வாய்மை நச்சினார்க் கினியன்

என்ற பாயிரப்பகுதி இவர் வாழ்க்கை வரலாற்றைச் சுருக்கமாக உணர்த்துகின்றது. பாண்டிய நாட்டின் தலைநகராகிய மதுரையில் இவர் வாழ்ந்துவந்தவர். ஆசிரியர் தொழிலை மேற்கொண்டிருந்தவர். பரத்துவாச கோத்திரத்தவர், பார்ப்பன மரபினர், சிவஞானச் செல்வர் என்ற குறிப்புக்களைப் பாயிரம் நமக்கு உரைக்கின்றது.

'இவர், இளம்பூரணர், சேனாவரையர், பேராசிரியர் ஆகிய மூவரையும் குறிப்பிடுகின்றார்; வேறு சில உரையாசிரியர்களைப்

பெயர் கூறாமல் அவர்களின் கருத்துகளைக் குறிப்பிடுகின்றார். இவர் *நன்னூலாரின்* கருத்துகளைச் சொல்லதிகார உரையில் குறிப்பிடுகின்றார்.

தொடர்நிலைச் செய்யுள் என்பதனைக் காப்பியம் என்று வழங்கலாம் என்ற அடியார்க்குநல்லார் கருத்தைச் (சிலம்–பாயிரவுரை) *சீவகசிந்தாமணியுரையின்* தொடக்கத்தில் மறுப்பதால் அவருக்கு இவர் பிற்பட்டவர் என்பது விளங்கும்.

*சீவக சிந்தாமணியில்,* முக்தி இலம்பகத்தில் 'நாடக நயந்து காண்பார்' என்னும் செய்யுள் (391) உரையில் கோடகம் என்பதற்கு, "தாமம் மகுடம் பதுமம் கோடகம் கிம்புரி என்னும் ஐவகையிற் சிகரமாய்ச் செய்த முடி" என நச்சினார்க்கினியர், சூடாமணி நிகண்டு கூறும் கருத்தை எடுத்தாள்கிறார். (சூடாமணி–ஏழாம் பகுதி, செயற்கை வடிவப் பெயர்த்தொகுதி–22).

*தொல்காப்பியச்* செய்யுள் இயலில் (210) 'அகன்று பொருள் கிடப்பினும்' என்ற சூத்திரத்தின் உரையில், 'இனிப் பல செய்யுட்கள் வருமாறு சிந்தாமணியுள் யாம் கூறிய உரையான் உணர்க' என்றும் கூறுகின்றார். இதைக் கொண்டு நச்சினார்க்கினியர், *தொல்காப்பியத்திற்கு* உரை எழுதும் முன்னரே, *சீவக சிந்தாமணிக்கு* உரை எழுதி முடித்துவிட்டார் எனத் தெரிகிறது.

ஆனால் இக்கருத்திற்கு மாறாக வேறு சில சான்றுகள் இன்றுள்ள *சிந்தாமணி* உரையுள் உள்ளன. *சிந்தாமணியில்* உள்ள 72, 892, 1913, 2690 ஆகிய பாடல்களின் உரையில் நச்சினார்க்கினியர், *சிந்தாமணிக்கு* உரை இயற்றுமுன்னரே தாம் *தொல்காப்பியத்திற்கு* உரை இயற்றி இருப்பதாயும், அவ்வுரையில் தம் கருத்துக்களை விளக்கி இருப்பதாயும், அங்கே காணுமாறும் கூறுகின்றார்.[3]

இவர், முதலில் உரை எழுதத் தொடங்கிய நூல் *சிந்தாமணியா, தொல்காப்பியமா* என்னும் ஐயத்தைப் போக்க, இவற்றை எல்லாம் ஆராய்ந்த டாக்டர் உ.வே. சாமிநாதையர் ஒரு முடிவுக்கு வருகின்றார். *சீவக சிந்தாமணிக்கு* நச்சினார்க்கினியர் முதன்முதலில் ஓர் உரை இயற்றிச் சமண சமயத்தவரிடம் காட்டினார் என்றும், அவர்கள் அதனைப் புறக்கணிக்கவே பிறிதோர் உரை இயற்றி, அவர்களின் பாராட்டுதலைப் பெற்றார் என்றும் செவிவழிச் செய்தியாக ஒரு வரலாறு உண்டு என்பதைச் சுட்டிக்காட்டுகிறார்.[4]

நச்சினார்க்கினியர் முன்னோரை மறுத்து வேறுரை காணும் இடங்களும் உண்டு. எழுத்ததிகாரத்தில் சில இடங்களில் இளம்பூரணர் கருத்தை மறுக்கின்றார். சொல்லதிகாரத்தில் இளம்பூரணரை மறுப்பதோடு சேனாவரையரையும் மறுக்கின்றார். ஓரிடத்தில், "சேனாவரையர், ஆசிரியர் கருத்தும் சான்றோர் செய்யுள் வழக்கும் உணராமல் கூறினார்" (சொல்–414) என்று சிறிது வன்மையாகவே கூறுகின்றார். இவரது புலமை ஆற்றலாலும், உரைச் சிறப்பாலும் இவர், 'உச்சிமேல் புலவர்கொள் நச்சினார்க்கினியர்' எனப் பாராட்டப்படுகிறார்.

**பேராசிரியர்**

பேராசிரியர் என்னும் பெயரில் பண்டைய உரையாசிரியர் பலர் இருந்துள்ளனர்.

1. *திருக்கோவையாருக்கு* உரைகண்ட பேராசிரியர்.
2. பொதுப்பாயிரம் செய்த பேராசிரியர்.
3. மயேச்சுரர் என்னும் பேராசிரியர்.
4. *குறுந்தொகை* உரை எழுதிய பேராசிரியர்.
5. பேராசிரியர் நேமிநாதர்,
6. *தொல்காப்பிய* உரையாசிரியர்

என அறுவர் பேராசிரியர் என்னும் பெயரில் தமிழ் உரை வரலாற்றில் காணப்படுகின்றனர்.[5] அவர்களுள் *தொல்காப்பியப்* பொருளதிகாரத்திற்கு உரை எழுதிய பேராசிரியரே தமிழ் இலக்கிய உலகில் நன்கு அறிமுகமானவர். இவர்களுள் *தொல்காப்பியத்தோடு* தொடர்புடைய பொதுப்பாயிரம் செய்த பேராசிரியரைப் பற்றியும் *குறுந்தொகைக்கு* உரை எழுதிய பேராசிரியர் பற்றியும் காண்பது தேவையாகிறது.

*தொல்காப்பியத்திற்கு* உரையியற்றிய பேராசிரியர், "'வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும்' என்னும் பொதுப் பாயிரம் செய்தான் ஆதிரையன் பேராசிரியன் எனவும் பாயிரம் செய்தான் பெயர் கூறியவாறு" (தொ.பொ.100 உரை) என மரபியல் உரையில் கூறுகிறார். இங்குப் பொருளதிகாரத்திற்கு உரைசெய்த பேராசிரியர் தம்முடைய பெயரையே படர்க்கையாக்கிக் கூறினார் எனக் கொள்வது பொருந்துவதாக இல்லை. இப்பாயிரத்தை நச்சினார்க்கினியரும் தம்முடைய எழுத்ததிகார உரையில் குறிப்பிடவில்லை. பிற்காலத்தில் உரை இயற்றிய சிவஞான

முனிவரே இப்பொதுப்பாயிர 33 அடிகளையும் தம்முடைய *தொல்காப்பியச்* சூத்திர விருத்தியில் குறிப்பிடுகிறார். எனவே, பொருளதிகார உரையாசிரியரான பேராசிரியரும் பொதுப்பாயிரம் இயற்றிய பேராசிரியரும் ஒருவராக இருக்க வாய்ப்பில்லை என அறிஞர் கருதுகின்றனர்.[6]

*குறுந்தொகைக்கு* உரை எழுதிய பேராசிரியரைப் பற்றி நச்சினார்க்கினியர் தம் உரைச் சிறப்புப் பாயிரத்தில்,

> நல்லறிவுடைய தொல் பேராசான்
> கல்வியும் காட்சியும் காசினியும் அறியப்,
> பொருள் தெரிகுறுந்தொகை

எனப் பேராசிரியர் *குறுந்தொகைக்கு* உரைசெய்ததாகக் கூறுகிறார். ஆனால் அவர் இயற்றிய உரை கிடைக்கவில்லை.

இன்று அனைவராலும் அறியப்பட்டவர் *தொல்காப்பியத்துக்கு* உரை செய்த பேராசிரியர். இவர் பொருளதிகாரம் முழுமைக்கும் உரை செய்ததற்கான சான்றுகள் உள்ளன. ஆனால் மெய்ப்பாட்டியல் தொடங்கி மரபியல் முடிய உள்ள பின் நான்கு இயல்களுக்கே இவர் உரை கிடைத்துள்ளது; முதல் ஐந்து இயல்களுக்குக் கிடைக்கவில்லை.

இப்பேராசிரியரின் இயற்பெயர் இன்னதென்று தெரியவில்லை. இவரது உரைச் சிறப்பால் இவர் பேராசிரியர் என்றே அழைக்கப்படுகிறார். நச்சினார்க்கினியரும் தம் உரையில் பேராசிரியர் என்றே குறிப்பிடுகிறார்.

இளம்பூரணரோடு பல இடங்களில் மாறுபட்டு உரை எழுதுகிறார் பேராசிரியர். இவர் மாறுபடும் இடங்களில் பிறர் கருத்தை மிகவும் நுட்பமாக மறுக்கிறார். "அவர் அறியார்; அவ்வாறு சூத்திரம் செய்வது ஆசிரியர் கருத்தன்று" (செய்.101) "அவ்வாறு கூறுவார் செய்யுள் அறியாதார்" (செய்.130) என்பன போன்ற தொடர்களைப் பேராசிரியர் பிறர் கருத்தை மறுக்குமிடங்களில் கையாள்கிறார். இவர் தமக்கு முன் இருந்த உரையாசிரியர் பெயரையோ நூலாசிரியரின் பெயரையோ குறிப்பிடவில்லை. கருத்துக்களை மட்டுமே கூறி மறுக்கிறார். இளம்பூரணர் சுருக்கமாக உரை எழுதிய பகுதிகளுக்கு மிகுந்த விளக்கத்துடன், எடுத்துக்காட்டுடன் உரை எழுதுகிறார். அவ்வகையில் உத்தி பற்றிய மரபியல் இறுதி நூற்பா இவரின் உரையால் விளக்கமடைகிறது.

இவர் மூலநூலாசிரியரையும் பழைய மரபுகளையும் மிகவும் மதித்துப் போற்றுகிறார். சிறப்பில்லாத புதிய நூல்களையும் செய்யுள்களையும்

அவை சான்றோர் செய்யுள் அல்ல என மறுக்க (செய்.18)

அங்ஙனம் வந்தது பிற்காலத்துச் செய்யுள் என்க (செய்.17)

எனக் கடிந்தொதுக்குகிறார். தொல்காப்பியர், மரபியல் 31ஆம் நூற்பாவில் நண்டினை நான்கறிவு உயிராகக் குறிப்பிடுகிறார். அதனைக் கண்ட பேராசிரியர் நண்டிற்கு மூக்கு உளதோ இலதோ என ஐயுறுகிறார். இலதாயின் மூல நூலாசிரியர் குற்றம் செய்தார் என ஆகும் எனக் கருதி அதைக் கூற விரும்பாதவராய் "நண்டிற்கு மூக்கு உண்டோ எனில், அஃது ஆசிரியன் கூறலால் உண்டு என்பது பெற்றாம்" என மூல நூலாசிரியர்க்கு மதிப்பளித்து உரை எழுதுகிறார்.

இவர் தம்முரையில் *யாப்பருங்கலம், தண்டியலங்காரம், நன்னூல், கொன்றை வேந்தன், மூதுரை* ஆகிய நூல்களின் கருத்தை மேற்கோள்காட்டுகிறார். எனவே இவர் பன்னிரண்டாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டவர் எனலாம்.

### தெய்வச்சிலையார்

தெய்வச்சிலையார் சொல்லதிகாரத்திற்கு உரை இயற்றியவர். இவருக்குமுன் இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் ஆகியோர் உரைசெய்திருப்பினும் அவர்கள் கருத்துக்களைத் தம்முடைய உரையில் இவர் குறிப்பிடவில்லை.

> *போரில் இறந்த வீரர்களுக்கு நினைவாக நட்ட கல்லை, (நடுகல்லை) கொங்கு நாட்டார் தெய்வச்சிலை என்பர். பொதியமலை, தெய்வச்சிலை எனப்படும், திருமால் ஏந்திய வில்லை தெய்வச்சிலை என்பர். திருமாலுக்கு வழங்கும் பெயர்களில் ஒன்று தெய்வச்சிலையார் என்பது*[7]

என மு.வை. அரவிந்தன் குறிப்பிடுகிறார்.

இவர் சொல் என்பதற்கு வேதம் எனக் கூறுவதாலும், இந்நூல் செய்தான் வைதீக முனிவன் (55) எனக் கூறுவதாலும் இவரை வடமொழி பயின்ற அந்தணராகக் கருத வாய்ப்புண்டு.

தெய்வச்சிலையார் ஒவ்வோர் இயலின் முடிவிலும் அவ்வியலின் உரையினது அளவை இத்தனை எழுத்துகள் என்று

குறிப்பிடுகிறார். வேற்றுமையியலின் இறுதியில் "இவ் ஒத்தினுள் சூத்திரம் உட்பட உரையினது அளவு கிரந்த வகையால் முந்நூற்று முப்பது" என்கிறார்.

இவர் பல இடங்களில் முன்னைய உரையாசிரியர் கருத்தை ஏற்காது புதிய உரையை எழுதுகிறார். பாட வேறுபாடுகளை இவர் அதிகம் காட்டுகிறார்.

தெய்வச்சிலையார் எழுதிய *விறலிவிடு தூது*, *தெய்வச்சிலைப் பெருமாள் வாகனமாலை* ஆகியன *திருமாலைப்* பற்றிய நூல்கள். இவர் முதல் மாறவர்மன் குலசேகர பாண்டியன் (1268–1310) காலத்தில் திருநெல்வேலிப் பகுதியில் வாழ்ந்தவர் என்பார் ஈரோட்டுப் புலவர் இராசு.[8]

**கல்லாடனார்**

கல்லாடனார் என்பது சிவபெருமானின் பெயர். சொல்லதிகாரத்திற்கு உரைசெய்தவர்களில் கல்லாடனார் என்பவரும் ஒருவர்.

> *கல்லாடம் என்பது ஊரின் பெயர். அவ்வூரின் சிவபெருமான் கல்லாடர் எனப்படுகின்றார். அப்பெயரை மக்களுக்கு இட்டு வழங்கினர்*[9]

என்பார் மு.வை. அரவிந்தன்.

*கல்லாடம்* என்னும் பெயரில் நூல் ஒன்றும் இருக்கிறது. அந்நூலைக் கற்றவர் சிறந்த அறிஞராகக் கருதப்பட்டனர் என்பதைக் "கல்லாடம் கற்றாரோடு சொல்லாடாதே" என்னும் பழமொழி தெரிவிக்கிறது.

இச்சொல்லதிகாரத்திற்கு உரை இயற்றிய கல்லாடர் பழைய உரையாசிரியர் அனைவருக்கும் காலத்தால் பிற்பட்டவர். எனவே இவர் தமக்கு முன்பிருந்த உரைகளைக் கற்று அவற்றில் தமக்குப் பிடித்த உரைப் பகுதிகளையெல்லாம் தொகுத்துத் தம்முடைய உரையாக வழங்கியிருக்கிறார். சான்றுகளை, மேற்கோள் காட்டுமிடத்தும் இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் முதலியோர் காட்டியவற்றையே இவரும் வழிமொழிகிறார். இவரின் உரை இடையியல் (13 நூற்பாக்கள்) வரையே கிடைத்துள்ளது. ஒரு சூத்திரத்திற்கு இரண்டு கருத்துகளும் ஏற்புடையதாகத் தோன்றுமிடங்களில் ஒன்றனைத் துணிந்து கூறாது 'இரண்டனுள் நல்லது தெரிந்துரைக்க' என்கிறார். *பிரயோக விவேக* நூலாசிரியர்

"மக்கள் சுட்டு என்பதனைக் கல்லாடனாரும் பின்மொழியாகு பெயராய் நின்ற இருபெயரொட்டுப் பண்புத் தொகை என்பர்" (பிரயோக.22 உரை) எனக் குறிப்பிடுகிறார். எனவே, கல்லாடர் நச்சினார்க்கினியருக்குப் பின்னும் *பிரயோகவிவேக நூலாருக்கு* முன்னும் வாழ்ந்தவர் எனலாம். இவரது காலம் கி.பி. 15,16ஆம் நூற்றாண்டு என வரையறுக்கலாம்.

## பெயர் தெரியா ஒருவர்

பெயர் தெரியாத பழைய உரையாசிரியர் ஒருவரின் உரை *தொல்காப்பியச்* சொல்லதிகாரத்திற்குக் கிடைக்கின்றது. சொல்லதிகாரத்தின் முதல் மூன்று இயல்களான கிளவியாக்கம், வேற்றுமையியல், வேற்றுமை மயங்கியல் ஆகிய மூன்று இயல்களுக்கு மட்டுமே தற்போது இவரின் உரை கிடைக்கிறது. பிற இயல்களுக்கு இவர் உரை செய்தாரா எனத் தெரியவில்லை. இவர் பழைய *தொல்காப்பிய* உரையாசிரியர் அனைவருக்கும் பிற்பட்டவர். தமக்கு முன்னைய உரையாசிரியர்களின் சிறந்த கருத்துக்களைத் தழுவியே இவர் உரை செய்கின்றார்.

'நும் நாடு யாது?' என்னும் வினாவிற்குப் 'பாண்டியநாடு' என்றமையால் இவர் பாண்டியநாட்டைச் சேர்ந்தவர் என்றும், 'நறு நாற்றத்திற்குப் பூதி (விபூதி) நாற்றம்' எனவும் கூறுவதனால் இவர் சைவர் என்றும் கருத இடமுண்டு. இவர் காலம் அறியுமாறில்லை.

## உத்தி: பெயர்வேறுபாடு

*தொல்காப்பியம்* குறிப்பிடும் உத்திகளின் எண்ணிக்கையான 32 என்பதில் அதன் உரையாசிரியர்களான இளம்பூரணர், பேராசிரியர் ஆகியோர் இடையே கருத்து வேறுபாடு இல்லை. ஆனால் அவற்றின் பெயர்களை முடிவு செய்வதிலும், வரிசை முறை வைப்பிலும், வேறுபாடுகள் காணப்படுகின்றன. இவற்றிற்கேற்ப இப்பகுதி,

1. உத்திகளின் வரிசை முறை வைப்பும் வேறுபாடும்
2. உத்திகளின் பெயர்களில் காணப்படும் வேறுபாடு

எனப் பிரிக்கப்பட்டு உத்திகளைப் பற்றிய கருத்துகள் ஆராயப்பெறுகின்றன. இவ் வேறுபாடுகளை அறிய அவற்றைச் சுட்டும் நூற்பாவை அறிவது முதல் தேவையாகிறது.

ஒத்த காட்சி உத்திவகை விரிப்பின்
நுதலிய தறிதல் அதிகார முறையே
தொகுத்துக் கூறல் வகுத்து மெய்ந் நிறுத்தல்
மொழிந்த பொருளோடு ஒன்ற வைத்தல்
மொழியா ததனை முட்டின்றி முடித்தல்
வாரா ததனான் வந்தது முடித்தல்
வந்தது கொண்டு வாராதது முடித்தல்
முந்து மொழிந்ததன் தலைதடு மாற்றே
ஒப்பக் கூறல் ஒருதலை மொழியே
தன்கோட் கூறல் உடம்பொடு புணர்த்தல்
பிறனுடம் பட்டது தானுடம் படுதல்
இறந்தது காத்தல் எதிரது போற்றல்
மொழிவாம் என்றல் கூறிற் றென்றல்
தான்குறி யிடுதல் ஒருதலை யன்மை
முடிந்தது காட்டல் ஆணை கூறல்
பல்பொருட் கேற்பின் நல்லது கோடல்
தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல்
மறுதலைச் சிதைத்துத் தன்துணி புரைத்தல்
பிறன்கோட் கூறல் அறியா துடம்படல்
பொருளிடை யிடுதல் எதிர்பொருள் உணர்த்தல்
சொல்லின் எச்சம் சொல்லியாங்கு உணர்த்தல்
தந்துபுணர்ந் துரைத்தல் ஞாபகம் கூறல்
உய்த்துக்கொண் டுணர்த்தலொடு மெய்ப்பட நாடிச்
சொல்லிய அல்ல பிறவவண் வரினும்
சொல்லிய வகையாற் சுருங்க நாடி
மனத்தி னெண்ணி மாசறத் தெரிந்துகொண்டு
இனத்திற் சேர்த்தி யுணர்த்தல் வேண்டும்
நுனித்தகு புலவர் கூறிய நூலே. (தொ.பொ.656)

என்பது இளம்பூரணர் கொண்ட பாடம். பேராசிரியர் பாடங்கொண்ட முறை பின்வரும் பகுதியில் விளக்கப்படுகிறது.

## உத்திகளின் வரிசை முறை வைப்பும் வேறுபாடும்

இளம்பூரணர், பேராசிரியர் என்னும் இரு உரையாசிரியர்கள் சுட்டும் 32 உத்திகளில் சிலவற்றின் பெயர்களும் வரிசை முறையும் வேறுபடுகின்றன என்பதைக் கீழ்வரும் அட்டவணை காட்டுகிறது.

## தொல்காப்பிய உத்திகள்

| இளம்பூரணர் | பேராசிரியர் |
|---|---|
| 1. நுதலியதறிதல் | நுதலியதறிதல் |
| 2. அதிகார முறை | அதிகார முறைமை |
| 3. தொகுத்துக் கூறல் | தொகுத்துக் கூறல் |
| 4. வகுத்து மெய்ந்நிறுத்தல் | வகுத்து மெய்ந்நிறுத்தல் |
| 5. மொழிந்த பொருளோடு ஒன்றவைத்தல் | மொழிந்த பொருளோடு ஒன்ற அவ்வயின் மொழியாததனை முட்டின்று முடித்தல் |
| 6. மொழியாததனை முட்டின்று முடித்தல் | வாராததனான் வந்தது முடித்தல் |
| 7. வாராததனான் வந்தது முடித்தல் | வந்தது கொண்டு வாராதது உணர்த்தல் |
| 8. வந்தது கொண்டு வாராதது முடித்தல் | முந்து மொழிந்ததன் தலை தடுமாற்று |
| 9. முந்து மொழிந்ததன் தலை தடுமாற்று | ஒப்பக் கூறல் |
| 10. ஒப்பக் கூறல் | ஒருதலை மொழிதல் |
| 11. ஒருதலை மொழி | தன்கோட் கூறல் |
| 12. தன்கோட் கூறல் | முறை பிறழாமை |
| 13. உடம்பொடு புணர்த்தல் | பிறனுடம்பட்டது தானுடம்படல் |
| 14. பிறனுடம்பட்டது தானுடம்படுதல் | இறந்தது காத்தல் |
| 15. இறந்தது காத்தல் | எதிரது போற்றல் |
| 16. எதிரது போற்றல் | மொழிவாமென்றல் |
| 17. மொழிவாமென்றல் | கூறிற்றென்றல் |
| 18. கூறிற்றென்றல் | தான்குறியிடுதல் |
| 19. தான்குறியிடுதல் | ஒருதலையன்மை |
| 20. ஒருதலையன்மை முடிந்தது காட்டல் | முடிந்தது காட்டல் |
| 21. ஆணைகூறல் | ஆணை கூறல் |

| | | |
|---|---|---|
| 22. | பல்பொருட்கேற்பின் நல்லது கோடல் | பல்பொருட் கேற்பின் நல்லது கோடல் |
| 23. | தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல் | தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல் |
| 24. | மறுதலை சிதைத்துத் தன்றுணி புரைத்தல் | மறுதலை சிதைத்துத் தன்றுணி புரைத்தல் |
| 25. | பிறன்கோட் கூறல் | பிறன்கோட் கூறல் |
| 26. | அறியாதுடம்படல் | அறியாதுடம்படல் |
| 27. | பொருளிடையிடுதல் | பொருளிடையிடுதல் |
| 28. | எதிர்பொருளுணர்த்தல் | எதிர்பொருளுணர்த்தல் |
| 29. | சொல்லின் எச்சம் சொல்லியாங்குணர்த்தல் | சொல்லின் எச்சம் சொல்லியாங்குணர்த்தல் |
| 30. | தந்துபுணர்ந்துரைத்தல் | தந்துபுணர்ந்துரைத்தல் |
| 31. | ஞாபகங் கூறல் | ஞாபகங் கூறல் |
| 32. | உய்த்துக் கொண்டுணர்தல் | உய்த்துக் கொண்டுணர்தல் |

இப்பட்டியல் வரிசை எண் 2, 5 முதல் 20 வரை உள்ள 17 உத்திகளின் பெயர்களிலும் வரிசை முறையிலும் இளம்பூரணர், பேராசிரியர் இருவரும் வேறுபடுகின்றனர். ஏனைய 15 உத்திகளில் மட்டுமே வரிசை முறைவைப்பிலும் பெயரிலும் இவர்கள் ஒத்துப் போகின்றனர். ஆனால், இவ்விரு உரையாசிரியர்களும், அறிஞர்களும் உத்திகளுக்கான பெயரை முடிவு செய்வதிலும், பெயர் ஒன்றாயினும் அதனை வரையறை செய்வதிலும் வேறுபடுவதைக் காண முடிகிறது.

### உத்திகளின் பெயர்களில் காணப்படும் வேறுபாடு

தொல்காப்பியர் 32 உத்திகளைக் குறிப்பிடுகிறார். ஆனால் இவ்விருபெரும் உரையாசிரியர்களின் உரைகள், உத்திகளைத் தொல்காப்பியர் கூறிய பெயரிலேயே குறிப்பிடுகின்றனரா என்னும் ஐயத்தைத் தோற்றுவிக்கின்றன. எனவே உத்திகளின் பெயர்களில் காணப்படும் வேறுபாடுகளையும் ஆராய்வது தேவையாகிறது. இப்பெயர் வேறுபாடுகள்,

1. எழுத்து நிலையில் வேறுபடல்
2. சொல் நிலையில் வேறுபடல்
3. தொடர் நிலையில் வேறுபடல்

ஆகிய மூன்று நிலைகளில் காணப்படுகின்றன.

### எழுத்து நிலையில் வேறுபடல்:

*தொல்காப்பிய* இரண்டாவது உத்தியை 'அதிகார முறை' என இளம்பூரணர் கொண்டார். இதைப் பேராசிரியர் 'அதிகார முறைமை' என்கிறார்.

'ஒருதலை மொழி' என இளம்பூரணர் குறிப்பதனைப் பேராசிரியர் 'ஒருதலை மொழிதல்' எனப் பாடம் கொண்டுள்ளார்.

இளம்பூரணர் குறிப்பிடும் இவ்விரு உத்திகளிலும் ஒருசில எழுத்துக்களை மட்டுமே இறுதியில் பேராசிரியர் சேர்த்துள்ளார். ஆனால் உத்தியின் பெயர்கள் ஒன்றாகவே அமைந்துள்ளன.

### சொல் நிலையில் வேறுபடல்

இனி இவ்விரு உரையாசிரியர்களும் உத்திகளில் காணப்படும் சொற்களை மாற்றிப் பொருள் கொண்டுள்ளதைக் காணலாம்.

'வந்தது கொண்டு வாராதது முடித்தல்' என இளம்பூரணர் பாடங்கொண்டதில் பேராசிரியர் 'முடித்தல்' என்னும் சொல்லுக்குப் பதிலாக உணர்த்தல் எனப் பாடங்கொண்டு உத்தியின் பெயரை, 'வந்தது கொண்டு வாராதது உணர்த்தல்' எனக் கூறுகிறார்.

இளம்பூரணர் கருத்துப்படி 'மொழிந்த பொருளோடு ஒன்ற வைத்தல்' என்பது ஓர் உத்தியின் பெயர். 'மொழியாததனை முட்டின்று முடித்தல்' என்பது மற்றோர் உத்தியின் பெயர். பேராசிரியர், 'மொழிந்த பொருளோடு ஒன்ற வைத்தல்' என்னும் உத்தியின் இறுதிச் சொல்லான 'வைத்தல்' என்பதை 'அவ்வயின்' என மாற்றி இரண்டு உத்திகளையும் ஓர் உத்தியாகக் கொண்டார். இவர் கருத்துப்படி, 'மொழிந்த பொருளோடு ஒன்ற வவ்வயின் மொழியாததனை முட்டின்று முடித்தல்' என்பது ஒரே உத்தியாகும்.

### தொடர்நிலையில் வேறுபடுதல்

நூற்பாத் தொடரை இவ்விரு உரையாசிரியர்களும் எவ்வாறு பிரிக்கின்றனர், பொருள் கொள்கின்றனர் என்பதற்கேற்ப உத்திகளின் பெயர்களில் வேறுபடுகின்றனர்.

'ஒரு தலையன்மை முடிந்தது காட்டல்' என்னும் நூற்பாத் தொடரை இளம்பூரணர் ஒரே உத்தியாகக் கொண்டார். ஆனால் பேராசிரியர் அத்தொடரை 'ஒருதலையன்மை', 'முடிந்தது காட்டல்' என இரண்டு உத்திகளாகப் பிரித்துக் கொண்டார். முன்னர்ப்

பேராசிரியர் ஒரே தொடராகக் கொண்ட 'மொழிந்த பொருளோடு ஒன்ற அவ்வயின் மொழியாததனை முட்டின்று முடித்தல்' என்பதனை இளம்பூரணர் இரண்டு உத்திகளாகக் கொண்டார். இங்குப் பேராசிரியர் இரண்டு உத்திகளாகக் கொண்டவற்றை, இளம்பூரணர் ஒரே உத்தியாகக் கொண்டார். அதனால் இவ்வுரையாசிரியர்கள் உத்திகளின் எண்ணிக்கையில் சமநிலை பெற வாய்ப்பேற்பட்டது.

வேறோர் இடத்தில் இளம்பூரணர் பாடங்கொண்ட ஓர் உத்தியின் தொடரைப் பேராசிரியர் முற்றிலும் வேறுதொடராகக் கொண்டுள்ளார். பதிமூன்றாம் உத்தியாக 'உடம்பொடு புணர்த்தல்' என்பதனை இளம்பூரணர் கூறியுள்ளார். ஆனால் பேராசிரியர் இவ்வுத்தியைக் குறிப்பிடவில்லை. இவ்வுத்திக்குப் பதிலாக 'முறை பிறழாமை' என்னும் உத்தியைக் காட்டியுள்ளார். இவ்வாறு உத்திகளின் பெயர்களைப் பாடங்கொள்வதில் இவ்விரு உரையாசிரியர்களும் வேறுபட்டதைக் காணமுடிகிறது.

### உத்தி: வரையறையும் வேறுபாடும்

உத்திகளின் வரிசை முறை வைப்பிலும் பெயரிலும் இவ்விரு உரையாசிரியர்களும் வேறுபட்டமைபோலவே உத்திகளின் பொருள் வரையறையிலும் வேறுபடுகின்றனர். சில உத்திகளுக்கு முற்றிலும் வேறுபட்ட பொருளை உரையாசிரியர்களும் அறிஞர்களும் கூறுகின்றனர். எனவே உத்திகளுக்கு அவர்கள் கூறும் வரையறைகளைக் காண்பது தேவையாகிறது. வரையறையில் வேறுபாடு தோன்றாத இடத்தில் இளம்பூரணர் உரை மட்டும் காட்டப்படுகிறது. இங்குக் கருத்து விளக்க எளிமை கருதி உத்திகள் அகர வரிசைப்படுத்தப்பட்டுள்ளன.

### 1. அதிகாரமுறை / அதிகாரமுறைமை

உரையாசிரியர்கள், "முன்னர்ப் பலபொருளையதிகரித்த வழி பின்னும் அம்முறையானே விரித்துணர்த்துதல்" என இவ்வுத்திக்குப் பொருள் கூறுகின்றனர்.

### 2. அறியாதுடம்படல்

இவ்வுத்தியை இளம்பூரணர், "தான் அறியாத பொருளைப் பிறர்கூறியவாற்றான் உடம்படல்" என வரையறுக்கின்றார்.

இதற்குப் பேராசிரியர், "தானோதிய இலக்கணத்தின் வேறுபட வருவன தான் அறிந்திலனாகக் கூறி அதன் புறத்துச் செய்வதொரு புறனடை" எனப் பொருள் கூறுகிறார்.

இவை இரண்டும் ஒரே பொருளை உணர்த்துவன போல் தோன்றினும், பேராசிரியர் இதனைப் "புறனடை" என்றும் "அவையடக்கியல் போல்வதோர் உத்தியெனக்கொள்க" என்றும் கூறுவதனால் இது இளம்பூரணர் கூறும் பொருளினின்றும் வேறானது என்பதை அறியமுடிகிறது.

**3. ஆணைகூறல்**

இவ்வுத்தியை உரையாசிரியர்கள், "ஒரு பொருளைக் கூறும் வழி ஏதுவினாற் கூறலன்றித் தன்னாணையாற் கூறல்" என விளக்கியுள்ளனர்.

**4. இறந்தது காத்தல்**

இவ்வுத்தியை இளம்பூரணர், "மேற்கூறப்பட்ட சூத்திரத்தாற் கூறப்படாத பொருளைப் பின்வருகின்ற சூத்திரத்தால் அமைத்தல்" எனப் பொருள் கொள்கின்றார்.

பேராசிரியர், "முற்கூறிய ஓர் சூத்திரப் பொருண்மையைப் பின்னொரு சூத்திரத்தான் விலக்குதல்" எனக் கூறுகின்றார்.

இவ்விரு கருத்துக்களும் நேர் எதிரானவை. முதலாவது உரை புதிய கருத்து அமைத்தலைக் கூறுகிறது. மற்றது முன்னர்க் கூறப்பட்ட ஒரு கருத்தை நீக்குதல் எனப் பொருள்படுகிறது.

பேராசிரியர் இவ்வுத்தியினை மேலும் விளக்குமிடத்து, "இறந்ததென்பது தான் துணிந்து சொல்லப்பட்ட பொருளாகல் வேண்டும்" என்று கூறுவதால் இளம்பூரணர் கூறும் வரையறையிலிருந்து இது மாறுபட்டது என்பது தெளிவாகின்றது.

*தொல்காப்பியத்திற்கு* வழி நூலான *நன்னூல்*(15) இளம்பூரணர் உரையைத் தழுவியது என்பர் அறிஞர். ஆனால், அது இவ்வுத்தியை 'இறந்தது விலக்கல்' என்றே குறிப்பிடுகிறது. இது இளம்பூரணர் கருத்திற்கு மாறானதாகும். பேராசிரியர், *நன்னூலைப்* பின்பற்றியே இவ்வுத்திக்கு மேற்கண்ட பொருளை வரையறுத்தார் எனக் கருத இடமுண்டு. *நன்னூலுக்கும்* பிற்பட்ட இலக்கண நூலான *சுவாமிநாதம்* (10) (பிரிட்டிஷ் அருங்காட்சி சாலைப் படி) இவ்வுத்தியை 'இறப்பகற்றல்' என்கிறது. அவ்வாறே நவநீதப்பாட்டியலின் உரையாசிரியர், 'இறந்தது விலக்கம்'(72) என்றும், *யாப்பருங்கலம்*(95), *யாப்பருங்கலக் காரிகை*(45) உரையாசிரியர்கள் 'இறந்தது விலக்கல்' என்றும் இவ்வுத்தியைக் குறிப்பிடுகின்றனர்.

**5. உடம்பொடு புணர்த்தல்**

இவ்வுத்தியினை இளம்பூரணர் மட்டுமே கூறுகின்றார். பேராசிரியர் கூறவில்லை.

இதற்கு இளம்பூரணர், "இலக்கண வகையான் ஓதுதல் அன்றி ஆசிரியனுக்கின்றிச் சூத்திரத்தின் கண்ணேயொரு சொல்லை வைப்பானாயின் அவ்வைப்பினை இலக்கணமாகக் கோடல்" எனப் பொருள் வரையறை செய்கின்றார்.

**6. உய்த்துக் கொண்டுணர்த்தல்**

*தொல்காப்பிய* நூற்பாவில் 'உணர்த்தல்' எனப் பிறவினையாக இவ்வுத்தியின் பெயர் அமைந்திருக்கிறது. இருவர் உரையிலும் 'உணர்தல்' எனத் தன் வினையாகப் பொருள் கூறப்படுகிறது. இளம்பூரணர் இவ்வுத்திக்கு,

> *"ஒரு சூத்திரத்தான் ஓரிலக்கணம் ஓதியவழி அதற்குப் பொருந்தாமை யுளதாகத் தோன்றின் அதற்குப் பொருந்துமாறு விசாரித்துணர்தல்" எனத் தன் வினையாகவே பொருள் கூறுகிறார். இதற்குப் பேராசிரியர்,*
>
> *"ஒருவழி ஒரு பொருள் சொல்லியக்கால் அதன் கண்ணே மற்றொரு பொருளினையும் கொணர்ந்து கொண்டறியுமாறு தோன்றச் செய்தல்" என வரையறை செய்கிறார். இவ்வுத்தியைத் தத்துவத்தோடு தொடர்புபடுத்தி,*
>
> *"உய்த்துக்கொண்டு உணர்த்தல் என்பது அனுமானம். இதனை மணிமேகலை 'கருதல்' எனக் குறிப்பிடும்.'*[10]

என நிர்மல் செல்வமணி கூறுகிறார்.

மேற்கண்ட உரையாசிரியர் கருத்துக்களை நோக்குமிடத்து 'உய்த்துக்கொண்டுணர்த்தல்' என்னும் உத்தி 'உய்த்துக் கொண்டுணர்தல்' என இருந்தாலே அவ்வுத்திக்குச் சிறப்பு என அவர்கள் எண்ணியிருக்கக்கூடும் என எண்ணத் தோன்றுகிறது. ஆனால் இவ்வுத்தியைப் போன்றே 'உணர்த்தல்' என முடிகின்ற 'எதிர்பொருள் உணர்த்தல்', 'சொல்லினெச்சம் சொல்லியாங் குணர்த்தல்' என்னும் உத்திகளுக்கு இவர்கள் 'உணர்தல்' எனத்

தன்வினையாகக் கொண்டு பொருள் கூறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

**7. எதிர்பொருளுணர்த்தல்**

இவ்வுத்திக்கு இளம்பூரணர்,

"இனிக் கூற வேண்டுவது இது என உணர்த்தல்"

எனப் பொருள் கூறுகிறார். ஆனால் பேராசிரியர்,

*''தான் கூறிய இலக்கணத்திற் சில பிற்காலத்துத் திரிபு படினும் படுமென்பது. முற்கால முதனூலுங் கொண்டுணர்ந்த ஆசிரியன் எதிர்காலத்து வருவது நோக்கி அதற்கேற்றதோர் இலக்கணம் கூறிப் போதல்:*

மகரத் தொடர்மொழி மயங்குதல் வரைந்த
ன கரத் தொடர்மொழி யொன்பஃதென்ப
புகரறக் கிளந்த அஃறிணை மேன (தொ.எ.மொழி.49)

என ஓதிய இலக்கணத்துச் சில பிற்காலத்துக் குறைய வருதல் எதிர் பொருளெனப்படும். அதனைத் தான் உணர்ந்து,

கடிசொல் இல்லை காலத்துப் படினே (தொ.சொ.எச்.56)

*என்று கூறவே முற்கூறிய பொருளினை வற்புறுத்தலாம் அதுவென்பது. இங்ஙனம் திரிபுபடுதல் அறிந்தே கூறுதலானும் எதிர் பொருளாகலானும் இஃதறியாது உடம்படுதலின் அடங்காதாயிற்று.''*

எனக் கூறும் காரணங்களின் மூலம் இவ்வுத்தி வழிநூலை நோக்கி முதல் நூலில் அமைந்ததாகப் பேராசிரியர் கூறுகிறார் என்பது தெரிகிறது.

**8. எதிரது போற்றல்**

உரையாசிரியர்கள் இவ்வுத்திக்கு, "முன் கூறப்பட்ட சூத்திரத்தானே வருகின்ற சூத்திரத்திற் பொருளினையும் பாதுகாக்குமாறு வைத்தல்" என்று விளக்குகின்றனர்.

ஆனால் *நன்னூல்* உரையாசிரியரான ஆறுமுக நாவலர், "முற்காலத்து வழங்காத பிற்காலத்து வழங்கிவரும் இலக்கணத்தைத் தழுவிக்கொள்ளுதல்" (நன்.16, உரை) எனப் பொருள் கூறியுள்ளார். இளம்பூரணர் இவ்வுத்தியை நூலுக்குள்ளேயே அமைவதாகக் கூறுகிறார். ஆறுமுகநாவலர் முதல் நூல், வழி

நூலுக்கு உரியதாகக் குறிப்பிடுகிறார். இதனால் இவ்வுத்திக்கு இருவர் கூறும் பொருள்களும் வேறானவை என்பது புலனாகிறது.

## 9. ஒப்பக் கூறல்

இவ்வுத்திக்கு இளம்பூரணர், "ஒரு பொருளெடுத்து இலக்கணம் கூறிய வழி அது போல்வனவற்றையும் இலக்கணத்தான் முடித்தல்" எனக் கூறுகிறார்.

பேராசிரியர், "ஒன்று கூறுங்கால் இருபொருட் குறித்ததென்று இரட்டுறச் செய்தல்" என உரைக்கிறார்.

ஒரு பொருளைக் கூறுமிடத்து அதனோடு தொடர்புடையன வற்றையும் அப்பொருளைக் கூறுமிடத்திலேயே கூறிவிடுதல் என்பது இளம்பூரணர் கூறுகிற விளக்கம்.

ஆனால் பேராசிரியர், "இரு பொருள்பட இரட்டுறச் செய்வது" இவ்வுத்தி எனக் கூறுவதனால் இவ்வுத்தியை இரட்டுற மொழிதலாகக் கொள்கிறார் என்பது புலனாகிறது. இவர், இவ்வுத்தியை இரட்டுற மொழிதலாகக் கூற, இளம்பூரணர் 'ஞாபகங் கூறல்' என்னும் உத்தியை இரட்டுற மொழிதல் என்கிறார்.

"ஞாபகங் கூறல்" என்னும் உத்திக்குப் பேராசிரியர் இரட்டுற மொழிதல் எனக் கூறாது "வேறு பல பொருள் உரைத்தல்" என்று பொருள் கூறுகிறார். எனவே, இரட்டுற மொழிதல் என்பதை இளம்பூரணரும், பேராசிரியரும் முறையே 'ஞாபகங்கூறல்', 'ஒப்பக்கூறல்' ஆகிய உத்திகளுக்குப் பொருளாகக் குறிப்பிடுகின்றனர் என அறியலாம்.

## 10. ஒருதலையன்மை

இவ்வுத்தியைப் பேராசிரியரே குறிப்பிடுகின்றார். இதற்கு இவர் ''யாண்டும் ஒருதலையாக வாராது, வருஞான்று வருவது ஆண்டேன்று கொள்ளவைத்தல்'' எனப் பொருள் கூறியுள்ளார். இதனை விளக்குகையில் நிர்மல் செல்வமணி,

> *ஒருதலை—துணிபு, ஒருதலை அன்மை என்பது துணிபு இன்மை, துணிய இயலாமை. ஒன்றிற்கு இதுவே பொருள் எனத் துணியவியலாத இடத்தில் இவ்வுத்தியைக் கடைப்பிடிப்பர்*[11]

என்கிறார்.

### 11. ஒருதலையன்மை முடிந்தது காட்டல்

'ஒருதலையன்மை' என்பதனோடு 'முடிந்தது காட்டல்' என்பதனையும் சேர்த்து ஓர் உத்தியாக இளம்பூரணர் குறிப்பிடுகிறார். இது பேராசிரியர்க்கு உடன்பாடில்லை. இளம்பூரணர் இதனை, "ஒரு பொருளை ஓதிய வழிச் செல்லுவதற்கேயுரித்தன்றிப் பிற பொருட்கும் பொதுவாக முடிந்தமை காட்டல்" என வரையறை செய்கிறார்.

### 12. ஒருதலை மொழி / ஒருதலை மொழிதல்

'ஒருதலை மொழி' எனப் பாடங்கொண்டவர் இளம்பூரணர். இதற்கு,

> *ஏகாக்கரம் என்னும் வடமொழிப் பொருண்மை. அஃதாவது சூத்திரத்திற்குப் பொருள் கவர்த்துத் தோன்றின் அதனுள் ஒன்றனைத் துணிந்து கூறல்*

என விளக்கம் அளிக்கின்றார். பேராசிரியர் இதனை 'ஒருதலை மொழிதல்' எனப் பாடங் கொண்டார். எழுத்துநிலையில் மாறுபட்ட பேராசிரியர், பொருள் நிலையிலும் மாறுபட்டு,

> *ஓரதிகாரத்திற் சொல்லற்பாலதனை வேறு அதிகாரத்துச் சொல்லி அவ்விலக்கணமே ஆண்டுங்கொள்ள வைத்தல்*

எனக் கூறுகிறார்.

### 13. கூறிற்றென்றல்

உரையாசிரியர்கள் இவ்வுத்திக்குப் "பலபொருளா யதிகரித்தவற்றுட் சில பொருளை மேற்சொல்லப்பட்டன வென்றல்" எனப் பொருள் கூறுகின்றனர்.

### 14. சொல்லினெச்சம் சொல்லியாங்குணர்த்தல்

இவ்வுத்திக்கு உரையாசிரியர்கள் "பிரிநிலை முதலாகச் சொல்லப்பட்ட எச்சங்களைக் கண்டு அங்குச் சொல்லிய வாற்றாற் பொருள் கோடல்" எனக் கூறுகின்றனர்.

### 15. ஞாபகங்கூறல்

இளம்பூரணர் "இரட்டுற மொழிந்து இரண்டு சொற்கும் பொருள் கோடல்" எனப் பொருள் கூறியுள்ளார்.

இக்கருத்தினோடு உடன்படாத பேராசிரியர் "சூத்திரம் செய்யுங்கால் அதற்கு ஓதிய இலக்கண வகையானே சில்வகை எழுத்தின் செய்யுட்டாகவும் நாடுதலின்றிப் பொருணனி விளங்கவும் செய்யாது அரிதும் பெரிதுமாக நலிந்து செய்து மற்றும் அதனானே வேறு பல பொருள் உணர்த்தல்" என்று பொருள் கூறியுள்ளார். இதில் "இரட்டுற மொழிதல்" என இளம்பூரணர் கூறியதினின்று மாறுபட்டு, "வேறுபலபொருள் உணர்த்தல்" எனப் பேராசிரியர் கூறியிருப்பதனால் இவ்வுத்திக்கு இருவர் கூறும் பொருளும் வேறுபடுவதை அறியமுடிகிறது. இதற்கு நிர்மல் செல்வமணி,

> *"ஞாபகம், கட்டுதல், ஒன்றைப் பிரிதொன்றுடன் இணைத்தல், வேறு பொருள், ஞா(கட்டு)+ப்+அகம் (கடைநிலை)– ஞாபகம். ஒன்றைக் கூறிப் பிறிதொன்றைத் தோன்றச்செய்தல் "ஞாபகம் கூறல்"*[12]

எனப் புதிய பொருளைக் கூறுகின்றார்.

**16. தந்து புணர்ந்துரைத்தல்**

இவ்வுத்திக்கு இளம்பூரணர், "முன்னாயினும் பின்னாயினும் நின்ற சூத்திரத்தின் சொல்லை இடைநின்ற சூத்திரத்தினுங் கொணர்ந்து புணர்ந்துரைத்தல்" எனக் கூறுகிறார்.

இதனைப் பேராசிரியர், "உள்பொருள் அல்லதனை உளபோலத் தந்து கூட உணர்த்துதல்" எனக் குறிப்பிடுகிறார்.

இளம்பூரணர் கூறியது போல் கொண்டால் வேறு சூத்திரத்தில் உள்ள சொல்லை இடைநின்ற சூத்திரத்தில் கொணர்ந்து புணர்த்தல் எனப் பொருள்படும். பேராசிரியர் கூறுவதுபோல் கொண்டால் அச்சூத்திரத்தில் இல்லாத பொருளை உள்ளது போல உணர்த்துதல் எனப் பொருள்படும். இதனை,

"மெய்யுயிர் நீங்கிற் றன்னுருவாகும்"

(தொல்–எழுத்து–புண.37)

எனும் நூற்பாவிற்கு இளம்பூரணர் மேற்கூறிய புள்ளியினையே "ஒரு பயனோக்கி மீண்டும் புள்ளிபெறுமெனக் கூறுதல் அதற்கு இன மெனப்படும்" எனக் கூறுவதால் அறியலாம்.

**17. தன்கோட்கூறல்**

இளம்பூரணர் இவ்வுத்திக்குப் "பிறநூலாசிரியர் கூறியவாறு கூறாது தன் கோட்பாட்டால் கூறுதல்" எனப் பொருள் உரைக்கிறார்.

பேராசிரியர் "சொல்லாதன பிறவுளவாயினும் அந்நூற்கு வேண்டுவதே கொள்வானென்றல்" என்று பொருள் கூறுகின்றார்.

இளம்பூரணர் கூறுவது, 'பிறநூலாசிரியன் கருத்தை வழி மொழியாது தன்னுடைய கொள்கையை முன்னிறுத்திக் கூறுதல்' என்பதாகும். பேராசிரியர் இதிலிருந்து மாறுபட்டு 'நூலாசிரியன் கூறக் கருதிய செய்திகள் பல உளவாயினும் அவற்றில் நூலுக்கு வேண்டிய கருத்தை அடியொற்றியே கூறுதல் 'தன்கோட் கூறல்' என்கின்றார்.

**18. தான் குறியிடுதல்**

இதற்கு இளம்பூரணர் "உலகின் கண் வழக்கின்றியொரு பொருட்கு ஆசிரியன்றான் குறியிடல்" என 'அப்பொருளைக் குறியிடும் முன் உலகில் அப்பொருள் வழக்கில் இல்லை' எனப் பொருள் கூறியுள்ளார். பேராசிரியர், "உலகு குறியின்றித் தன்னூலுள்ளே வேறு குறியிட்டாளல்" என 'அப்பொருளுக்கு உலகு இட்ட குறியை நீக்கித் தன்னூலில் கையாள்வதற்கு என வேறு குறியிட்டார்' என்னும் பொருள்கூறுகிறார். ஆனால் இவ்விருவருமே "உயர்திணை, அஃறிணை" என்பனவற்றை எடுத்துக் காட்டியுள்ளனர்.

**"உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே**
**அஃறிணை என்மனார் அவரல பிறவே" (தொ.சொ–1)**

என்பதில் "என்மனார்" எனத் தொல்காப்பியர் கூறியுள்ளார். எனவே "உயர்திணை, அஃறிணை" என்னும் சொற்கள் முன்னோர் வாக்கில் இருந்தன என்பதை அறியமுடிகிறது.

நச்சினார்க்கினியர்,

*''மக்களாகிய நன்கு மதிக்கப்படும் பொருளை உயர்திணை என்று கூறுவர் தொல்லாசிரியர். அம்மக்கள் அல்லாத பிற பொருளை அஃறிணை என்று கூறுவர் தொல்லாசிரியர்.''*

எனக் கூறுவதால் இதனை நன்கு அறியலாம். அவ்வாறாயின் இவ்விரு உரையாசிரியர்களும் இவ்வெடுத்துக்காட்டை மேற்கண்ட உத்திக்குப் பயன்படுத்தியது எங்ஙனம் என்ற கேள்வி எழுகின்றது. இது மேலும் ஆய்வுக்குரியதாகும்.

### 19. தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல்

உரையாசிரியர்கள், ''தொகுத்துக் கூறிய சொல் தன்னானே பிறிதுமொரு பொருள் வகுத்துக் காட்டல்'' என்று இவ்வுத்திக்குப் பொருள் கூறுகின்றனர்.

### 20. தொகுத்துக் கூறல்

இதனை உரையாசிரியர்கள், "வகைபெறக்கூறல் வேண்டுமாயினும் அதனைத் தொகுத்துக் கூறல்" எனப் பொருள் கொள்கின்றனர். நிர்மல் செல்வமணி, `நூலின் இறுதியில் மொத்த கருத்துகளையும் தொகுத்துச் சொல்லுதல் தொகுத்துக் கூறல்' என்கிறார்.[13] இவர் கருத்து உரையாசிரியர் கருத்திற்கு நேர் எதிரானது. உரையாசிரியர் தொகுத்துக் கூறிப் பின்னர் விரிக்கப்படும் என்றும், நிர்மல் செல்வமணி விரித்துக் கூறியதனை இறுதியில் தொகுத்துக்கூறல் என்றும் பொருள் கூறியுள்ளனர். ஆபிரகாம் அருளப்பனும்,[14] அ.விசயலக்குமியும்[15] கூறும் கருத்துகள் நிர்மல் செல்வமணியின் கருத்தினை ஒத்தவை.

### 21. நுதலியதறிதல்

உரையாசிரியர்கள், "சூத்திரத்திற் சொற்ற பொருள் உணர்த்தலன்றி இதன் கருத்திதுவென உணர்த்தல்" எனப் பொருள் கூறியுள்ளனர். ஆனால் நிர்மல் செல்வமணி,

1. முன்னரே ஆக்கப் பெற்ற ஒரு நூலின் நுதலியதை அறிந்து கொள்ளுதல்
2. பொருள்கோள்
3. இதுகாறும் ஆக்கப் பெறாத ஒரு நூலிற்கு உரிய நுதல் பொருளைத் தேர்ந்தெடுத்தல்[16]

என மூன்று பொருள்களைக் கூறியுள்ளார். இவையும் உரையாசிரியர்கள் கருத்திற்கு மாறுபடுகின்றன.

### 22. பல்பொருட் கேற்பின் நல்லது கோடல்

இதற்கு உரையாசிரியர்கள் ''ஒரு சூத்திரம் பல பொருட்கேற்கு மாயின் அவற்றுள் நல்லதனைப் பொருளாகக் கோடல்'' என்று கூறியுள்ளனர்.

### 23. பிறன்கோட் கூறல்

இளம்பூரணர் இவ்வுத்திக்கு, ''பிறநூலாசிரியன் கொண்ட கோட்பாட்டைக் கூறுதல்'' எனவும், பேராசிரியர், '' தன்னூலே

பற்றாகப் பிறநூற்கு வருவதோர் இலக்கணம் கொள்ளுமாறு கூறுதல்'' எனவும் கூறுவதால் இருவர் கருத்தும் வேறாதலை அறியலாம்.

## 24. பிறன் உடம்பட்டது தானுடம்படுதல்

இளம்பூரணர், "பிற நூலாசிரியன் உடம்பட்ட பொருட்குத் தானுடம்படுதல்" என வரையறுக்கின்றார். ஆனால் பேராசிரியர் "உள்பொருள் அன்றாயினும் வழக்கியலாற் கொள்பொருள் இதுவெனக் கூறுதல்" எனக் குறிப்பிடுகின்றார். மேலும், "முதனூலுட் கொண்டவாறு அறிந்து மற்று அதனைத் தான் இச்சொல் இன்ன வாறாயிற்றென்று இலக்கணம் கூறாது உடம்படுதலின்" என்றும் கூறுவதனால் மேலே இளம்பூரணர் கருத்தினோடு இவர் வேறுபட்டுள்ளமை புலனாகின்றது.

## 25. பொருளிடையிடுதல்

இவ்வுத்திக்கு, "ஒரு பொருளையோதியவழி யதற்கினமாகிய பொருளைச் சேரக் கூறாது இடையீடுபடக் கூறுதல்" என இளம்பூரணர் பொருள் கூறுகின்றார். ஆனால் பேராசிரியர், "சொல்கின்ற பொருட்கு இயைபுடையதனை ஆண்டுச் சொல்லாது இடையிட்டுப் போய்ப் பிறிதொருவழி சொல்லுதல்" எனக் கூறி, "வேற்றுமைப் பொருளினைச் சொல்கின்ற பொருண்மைக்கிடையே பெய்து சொல்லுதல்" என்பதனையும் கூட்டிச் சொல்கிறார்.

## 26. மறுதலை சிதைத்துத் தன்துணிபுரைத்தல்

இதற்குப், "பிற நூலாசிரியன் கூறிய பொருண்மையைக் கெடுத்துத் தன்றுணிவு கூறுதல்" என இளம்பூரணர் பொருள் கொள்கிறார். இக்கருத்தை ஏற்காத பேராசிரியர், "ஒரு பொருளினை ஒருவன் வேறுபடக் கொள்வதோர் உணர்வு தோன்றியக்கால் அவ்வேறுபாட்டினை மாற்றித் தான் துணிந்தவாறு அவற்கும் அறிவுறுத்தல்" எனக் கூறுகின்றார்.

## 27. முந்து மொழிந்ததன் தலை தடுமாற்று

இவ்வுத்திக்கு உரையாசிரியர்கள் ''முற்பட அதிகரித்த பொருளையவ் வகையினாற் கூறாது முறைபிறழக் கூறல்" எனக் கூறியுள்ளனர்.

## 28. முடிந்தது காட்டல்

இவ்வுத்தி பேராசிரியர் கொண்ட பாடம். இவர், "சொல்லுகின்ற பொருட்கு வேண்டுவன வெல்லாம் சொல்லாது

தொல்லாசிரியர் கூறினார் என்று சொல்லுதல்" என வரையறை செய்கின்றார்.

### 29. முறை பிறழாமை

இவ்வுத்தியையும் பேராசிரியரே கூறியுள்ளார். இவர் "காரணமின்றித் தான் சிலபொருள் எண்ணி நிறுத்திய பின்னர் அம்முறை பிறழ்ந்தாலும் குற்றமில் வழியும் அம்முறையினையே இலக்கணமாகச் சொல்லுதல்" எனப் பொருள் கூறுகின்றார்.

### 30. மொழிந்த பொருளோடு ஒன்ற வவ்வயின் மொழியாததனை முட்டின்று முடித்தல்

இவ்வுத்தியைப் பேராசிரியர் குறிப்பிட்டுள்ளார். இதற்கு "எடுத்தோதிய பொருண்மைக்கு ஏற்ற வகையான் அப்பொருண்மைக்கட் சொல்லாததொன்று கொள்ளவைத்தல்" எனப் பொருள் வரையறுக்கிறார்.

### 31. மொழிந்த பொருளோடு ஒன்றவைத்தல்

இதற்கு உரையாசிரியர்கள், 'சூத்திரத்துட் பொருள் பலபடத் தோன்றுமாயின் முற்பட்ட சூத்திரத்திற்கொக்கும் பொருள் உரைத்தல். அன்றியும் முற்பட்ட சூத்திரத்தினான் ஒரு பொருள் ஓதியவழி பிற்பட்ட சூத்திரமும் பொருளோடு ஒன்ற வைத்தலுமாம்" எனப் பொருள் கூறியுள்ளனர்.

### 32. மொழியாததனை முட்டின்று முடித்தல்

உரையாசிரியர்கள் இதற்கு ''எடுத்தோதாத பொருளை முட்டுப்படாமல் உரையினான் முடித்தல். இதனை "உரையிற்கோடல்" என்ப'' எனக் கூறியுள்ளனர்.

### 33. மொழிவாமென்றல்

"சில பொருளைக் கூறி அவற்றுளொன்றனை யின்ன விடத்துக் கூறுவாமென உரைத்தல்" என இவ்வுத்திக்கு உரையாசிரியர்கள் பொருள் வரையறுக்கின்றனர்.

### 34. வகுத்து மெய்ந்நிறுத்தல்

உரையாசிரியர்கள் இவ்வுத்திக்குத் "தொகைபடக் கூறிய பொருளை வகைபடக் கூறல்" எனப் பொருள் கூறியுள்ளனர்.

**35. வந்தது கொண்டு வாராதது முடித்தல் / உணர்த்தல்**

இவ்வுத்திக்கு, ''ஒருங்கெண்ணப்பட்டவற்று ளொன்றைப் பகுத்து இலக்கணம் கூறிய வழி வாராததன் கண்ணும் இவ்விலக்கணத்தைக் கூட்டி முடித்தல்'' என உரையாசிரியர்கள் விளக்கம் அளிக்கின்றனர்.

**36. வாராததனான் வந்தது முடித்தல்**

இதற்கு, இளம்பூரணர், ''ஒருங்கெண்ணப்பட்ட பொருளொன்றனைப் பகுத்துக் கூறிய வழி ஆண்டு வாராததற்கு ஓதிய விலக்கணத்தை இதன் கண்ணும் வருவித்துணர்த்தல்'' எனப் பொருள் கூறுகின்றார்.

ஆனால் பேராசிரியர் ''ஒரு பொருண்மைக்கு வேண்டும் இலக்கணம் நிரம்ப வாராததால், சூத்திரத்தானே அங்ஙனம் வந்த பொருண்மைக்கு வேண்டும் முடிபுகொள்ளச் செய்தல்'' எனக் கூறுவதனால் அச்சூத்திரத்தின் பொருண்மை நிரம்ப வாராததோர் சூத்திரத்தின் கண்ணே பொருள்கொள்ளச் செய்தல் என்ற பொருள் விளக்கம் கிடைக்கின்றது.

தொகுப்புரை

இப்பகுதியில் ஆராய்ந்த கருத்துகளின் தொகுப்புரையாகக் கீழ்க்கண்டவை அமைகின்றன.

1. *தொல்காப்பியத்திற்கு* இளம்பூரணர், சேனாவரையர், பேராசிரியர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார், கல்லாடனார், பெயர் தெரியா ஒருவர் ஆகியோரின் பழைய உரைகள் கிடைத்துள்ளன. இக்காலத்திலும் அறிஞர் பலர் மரபை ஒட்டியும், மொழியியல் நோக்கிலும் உரைகண்டுள்ளனர்.

2. உத்திகளின் எண்ணிக்கை 32 என்பதில் உரையாசிரியர் களுக்கிடையே வேறுபாடில்லை. *தொல்காப்பியத்தில்* 32 உத்திகளின் வரிசை முறை வைப்பிலும், அவற்றின் பெயர்களை முடிவு செய்வதிலும் வரையறை செய்வதிலும் உரையாசிரியர் வேறுபடுகின்றனர். இத்தகைய வேற்றுமைகள், பொருள் நிலையில் மட்டுமன்றி, எழுத்து நிலையிலும், சொல்நிலையிலும், தொடர் நிலையிலும் காணப்படுகின்றன. ஒரே பெயர் கொண்ட உத்தியை உரையாசிரியர்கள் வெவ்வேறு பொருளில் வரையறை செய்கின்றனர்.

3. இவ்வேறுபாட்டிற்குத், *தொல்காப்பியத்திற்கும்* அதன் உரையாசிரியர்களுக்கும் இடையே உள்ள நீண்ட கால இடைவெளியும், அக்கால இடைவெளியில் பல்வேறு இலக்கண நூல்கள் தோன்றிப் புதிய உத்திகள் பலவற்றைத் தம் நூலில் குறிப்பிட்டமையும், உரையாசிரியர்களின் தனிப்பட்ட இலக்கணக் கோட்பாடுகளும்தாம் காரணம்.

4. பாடவேறுபாடுகளை உண்மையென நினைக்கும் உரையாசிரியர்கள் அவற்றிற்கு ஏற்பப் பொருள் கொள்வதும் உரையாசிரியர்களுக்கிடையே கருத்து வேறுபாடுகள் தோன்றக் காரணமாகும்.

## குறிப்புகள்

1. மு. வை. அரவிந்தன், *உரையாசிரியர்கள்,* ப. 146.
2. மேற்., பக். 184, 185.
3. மேற்., பக். 230, 231.
4. மேற்., ப. 231.
5. மேற்., பக். 197–200.
6. மேற்., ப. 198.
7. மேற்., ப. 211.
8. மேற்., ப. 212.
9. மேற்., ப. 220.
10. நிர்மல் செல்வமணி, *தமிழ்க் காட்சி நெறியியல்,* ப. 150.
11. மேற்., பக். 204, 205.
12. மேற்., ப. 207.
13. மேற்., ப. 195.
14. ஆபிரகாம் அருளப்பன், ''தொல்காப்பிய உத்திகள்'' தொல்காப்பியக் கருத்தரங்கு, ப. 2.
15. அ.விசயலக்குமி, ''தொல்காப்பிய உரையாசிரியர்களின் தருக்க நெறி உரைவிளக்கம்–தொல்.சொல்லதிகாரம், நச்சினார்க்கினியர் உரை'', இ.ப.த.ம., 1977, ப. 325.
16. நிர்மல் செல்வமணி, மு.நூ., ப. 144.

# உரைகள் காட்டும் உத்திகள்

*தொல்காப்பியப்* பழைய உரையாசிரியர்கள் அனைவரும் *தொல்காப்பியம்* சுட்டும் உத்திகளில் ஒன்றினையோ பலவற்றையோ தம் உரைகளில் ஆங்காங்கே சுட்டிக்காட்டிச் செல்கின்றனர். அவ்வாறு ஒரு நூற்பாவிற்கு உரியதாக அவர்கள் கருதும் உத்தியையே அந்நூற்பாவிற்கு அனைவரும் சுட்டிக் காட்டுவதுமில்லை. ஒரே உத்திக்குப் பல்வேறு நூற்பாக்களையும், ஒரே நூற்பாவிற்கு பல்வேறு உத்திகளையும் உரையாசிரியர் ஒருவரே குறிப்பிடுவதைக் காணமுடிகிறது. அதேபோல், ஒரே நூற்பாவிற்கு வெவ்வேறு உரையாசிரியர்கள், வெவ்வேறு உத்திகளைச் சுட்டிக் காட்டுவதையும் காண முடிகிறது. சில சமயங்களில் *தொல்காப்பியம்* சுட்டாத புதிய உத்திகளையும் தம் உரைகளில் இவர்கள் சுட்டிக்காட்டுகின்றனர். இதற்கேற்ப இப்பகுதி உரையாசிரியர்கள் காட்டும்,

1. ஒரே உத்திக்குப் பல்வேறு நூற்பாக்கள்
2. ஒரே நூற்பாவிற்குப் பல்வேறு உத்திகள்
3. ஒரே நூற்பாவும் உத்தி வேறுபாடும்
4. தொல்காப்பியர் கூறாத புதிய உத்திகள்

எனப் பிரிக்கப்பட்டுள்ளது.

### ஒரே உத்திக்குப் பல்வேறு நூற்பாக்கள்

தொல்காப்பியர் குறிப்பிடும் உத்திகளைத் தம் உரையில் உரையாசிரியர்கள் சுட்டிக்காட்டும் போது ஒரே உத்தியை அவர்கள் பல்வேறு இடங்களில் குறிப்பிட்டுச் செல்வதைக் காணமுடிகிறது. எனவே *தொல்காப்பியம்* கூறும் உத்திகள் அனைத்தையும் பழைய உரையாசிரியர்கள் தம் உரையில் சுட்டிக்காட்டியுள்ளனரா என்பதையும், அவர்கள் எந்தெந்த உத்திக்கு எந்தெந்த நூற்பாக்களைச் சுட்டிக்காட்டியுள்ளனர் என்பதையும் காண வேண்டியது தேவையாகிறது. அகர வரிசைப்படி காண்பது எளிதாகவும் பயனுள்ளதாகவும் அமையும் என்பதால் இங்கு உத்திகள் அகர வரிசைபடுத்தப்பட்டுள்ளன. நூற்பாக்களின் தொடக்கம் இப்பகுதியில் காட்டப்பட்டுள்ளது. உலகத் தமிழாராய்ச்சி

நிறுவனம் வெளியிட்ட ஆ.சிவலிங்கனார் உரைவளத்தில் குறிக்கப்பட்ட நூற்பாத் தொடர் எண்கள் அடைப்பில் கொடுக்கப்பட்டுள்ளன.

**1. அதிகாரமுறை / அதிகார முறைமை**

இளம்பூரணர் கருத்துப்படி உத்திப் பட்டியலில் இரண்டாவதாக அமைந்தது 'அதிகாரமுறை'யாகும். ஆனால் அவர், இவ்வுத்தியை விளக்குமிடத்து 'அதிகார முறைமை' எனக் குறிப்பிடுகிறார். பேராசிரியர் இதனை 'அதிகார முறைமை' என்றே பாடங்கொண்டார்.

இளம்பூரணர், ''அகர இறுதி...'' (தொ.எ.204), ''வினையெஞ்சு கிளவி...'' (தொ.எ. 205), ''ஆடூஉ வறிசொல்...'' (தொ.சொ. 2),

பேராசிரியர், ''குற்றிய லிகரம்...'' (தொ.எ. 34), ''நெட்டெழுத் திம்பரும்...'' (தொ.எ. 36), ''இயற்கைப் பொருளை...'' (தொ.சொ. 19), ''செயற்கைப் பொருளை...'' (தொ.சொ. 20),

நச்சினார்க்கினியர், ''நெட்டெழுத் திம்பரும்...'' (தொ.எ.36),

தெய்வச்சிலையார், ''பெயர்நிலை....'' (எ.சொ.443), ஆகிய நூற்பாக்களை இவ்வுத்திக்குரியனவாக்குகின்றனர்.

பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் தொ.எ.36 'நெட்டெழுத் திம்பரும்' நூற்பாவைச் சுட்டியுள்ளது குறிக்கத் தக்கது. சி. பிலோமினாள் இவ்வுத்தியை உரை விளக்கத்திற்காகக் கல்லாடனார் தொல்.சொல்.1, 152, 179, 244 ஆகிய நூற்பாக்களில் எடுத்தாண்டதாகக் கூறுகிறார்.[1] ஆனால் கல்லாடனார் உரையில் அவ்வுத்தியின் பெயரைக் காணமுடியவில்லை. ஒருகால் கல்லாடனார் உரைப் பொருள் அதுவாக இருந்திருக்கும் என்பது சி.பிலோமினாள் கருத்தாதல் வேண்டும்.

**2. அறியாதுடம்படல்**

*தொல்காப்பிய* உத்திகளின் பட்டியலில் 26ஆவதாக இடம்பெறும் இவ்வுத்திக்குப் பேராசிரியர் மட்டுமே *தொல்காப்பிய* நூற்பாக்களை மேற்கோள் காட்டுகிறார். பிற உரையாசிரியர்கள் யாரும் தம் உரையில் எந்த இடத்திலும் இவ்வுத்தியைச் சுட்டிக் காட்டவில்லை.

பேராசிரியர், ''நெடியதன் முன்னர்...''(தொ.எ.161), ''மெல்லெழுத் துறழு...'' (தொ.எ.313), ''கிளந்த வல்ல...'' (தொ.சொ.114), ''செய்யுள் மருங்கின்...''(தொ.பொ.544) ஆகிய நூற்பாக்களை இவ்வுத்திக்குரியதாகக் குறிப்பிடுகிறார்.

**3. ஆணைகூறல்**

பட்டியலில் 21ஆவதாக இடம்பெறும் இவ்வுத்தியைத் தம் உரையில் குறிப்பிடும் உரையாசிரியர்கள் இளம்பூரணர், பேராசிரியர், நச்சினார்க்கினியர் மூவரும் ஆவர்.

இளம்பூரணர், ''விளிகொள்வதன்...''(தொ.சொ.64),

பேராசிரியர், ''அம்மிமுன் இறுதி...''(தொ.எ.130), ''அன்ன பிறவும்...'' (தொ.சொ.390),

நச்சினார்க்கினியர், ''கண்ணிமை நொடியென...''(தொ.எ.7), ''அல்வழி எல்லாம்...''(தொ.எ.315), ''எதிர் மறுத்து மொழியினும்...''(தொ.சொ.103), ''அவற்றுள், மாத்திரை வகையும்...''(தொ.பொ.311) ஆகிய நூற்பாக்களை இவ்வுத்திக்கு உரியனவாகச் சுட்டுகின்றனர்.

**4. இறந்தது காத்தல்**

உத்திகளின் பட்டியலில் 15ஆவதாக இளம்பூரணர் இவ்வுத்தியைப் பாடங்கொண்டார். பேராசிரியர் 14ஆவதாகப் பாடங்கொண்டார். இவர்களோடு நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார், கல்லாடனார் ஆகியோர் இவ்வுத்தியைத் தம் உரைகளில் சுட்டியுள்ளனர்.

இளம்பூரணர், ''வல்லெழுத்து மிகினும்...''(தொ.எ.231), ''அவற்றுள், யாதென...'' (தொ.சொ.32), ''முறைப்பெயர் மருங்கின்...''(தொ.சொ.123), ''அன்மைச் சொல்லே...''(தொ.சொ.124), ''முறைப்பெயர்க் கிளவி...''(தொ.சொ.133), ''மறைக்குங் காலை...''(தொ.சொ.437), ''ஒத்து மூன்றாகும்...''(தொ.பொ.446),

பேராசிரியர், ''ஈறியல் மருங்கின்...''(தொ.எ.172), ''புள்ளி யிறுதி...''(தொ.எ.203), ''பால்கெழு கிளவி...''(தொ.பொ.197),

நச்சினார்க்கினியர், ''இடைச்சொற் கிளவிக்கு...'' (தொ.சொ.156), ''பால்கெழு கிளவி...''(தொ.பொ.197),

தெய்வச்சிலையார், ''ஆண்மை திரிந்த...''(தொ.சொ.12),

கல்லாடனார், ''இடைச் சொற்கிளவி...''(தொ.சொ.156), ''அவற்றொடு வருவழி...''(தொ.சொ.230) ஆகிய நூற்பாக்களை இவ்வுத்திக்கு உரித்தாக்குகின்றனர்.

தொ.பொ.197 நூற்பாவினைப் பேராசிரியர், நச்சினார்க்கினியர் இருவரும் இவ்வுத்திக்குச் சுட்டிக்காட்டியுள்ளமை குறிக்கத்தக்கது.

### 5. உடம்பொடு புணர்தல்

*தொல்காப்பிய* உத்திகளின் பட்டியலில் 13 ஆவதாக இடம் பெறுவதாக இதனை இளம்பூரணர் பாடம்கொண்டார். இவ்வுத்தியைத் *தொல்காப்பியப்* பழைய உரையாசிரியர்கள் எழுவரும் தம் உரையில் குறிப்பிடுகின்றனர்.

இளம்பூரணர், ''இனைத்தென அறிந்து...'' (தொ.சொ. 33), ''ஆரு மருவு...'' (தொ.சொ.135),

சேனாவரையர், ''அவற்றுள், முன்னிலை தன்மை...'' (தொ.சொ.221)

பேராசிரியர், ''குறிலே நெடிலே...''(தொ.பொ.312), ''இருவகை உகரமோடு...'' (தொ.பொ.313),

நச்சினார்க்கினியர், ''எழுத்தெனப் படுப...''(தொ.எ.1), ''ரஃகான் ஒற்றும்...'' (தொ.சொ.7), ''குடிமை யாண்மை...'' (தொ.சொ.57), ''மூன்றா குவதே...'' (தொ.சொ.73), ''ஏனைப் புள்ளி...''(தொ.சொ.126), ''அவற்றுள் முன்னிலை தன்மை...'' (தொ.சொ.221), ''பிணையும் பேணும்...'' (தொ.சொ.332), ''மாற்றருங் கூற்றஞ்...'' (தொ.பொ.77), ''நாலிரண் டாகும்...''(தொ.பொ.289), ''இருவகை உகரமோடு...'' (தொ.பொ.313),

தெய்வச்சிலையார், ''அர் ஆர் பவ்வென...'' (தொ.சொ.203), ''பன்மையு மொருமையும்...''(தொ.சொ.205),''அவற்றின் வரூஉ மெண்ணின் இறுதி...'' (தொ.சொ.285),

கல்லாடனார், ''இனைத்தென அறிந்த...''(தொ.சொ.33), ''அவைதாம், முன்னும் பின்னும்...''(தொ.சொ.246),

பெயர்தெரியாத ஒருவர், ''மூன்றா குவதே யொடுவென...'' (தொ.சொ.73) ஆகிய நூற்பாக்களை இவ்வுத்திக்கு உரியவையாகச் சுட்டுகின்றனர்.

## 6. உய்த்துக் கொண்டுணர்தல்

பட்டியலில் 32 ஆவதாக இடம்பெறும் இவ்வுத்தியைத் தம் உரையில் குறிப்பிடும் உரையாசிரியர்கள் இளம்பூரணர், பேராசிரியர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் நால்வரும் ஆவர்.

இளம்பூரணர், ''பனியென வரூஉம்...''(தொ.எ.242), ''உரிப்பொருள்...'' (தொ.பொ.15),

பேராசிரியர் ''நெட்டெழுத் திம்பரும்...''(தொ.எ.36), ''குற்றிய லுகரம் முறைப்பெயர்...''(தொ.எ.67), ''தன்சீர் வகையினுந்...'' (தொ.பொ.361), ''நெடுவெண் பாட்டே...'' (தொ.பொ.460), ''கலிவெண் பாட்டே...''(தொ.பொ.462),

நச்சினார்க்கினியர், ''வினையின் தோன்றும்...''(தொ.சொ.11), ''ஒரு பொருள்...'' (தொ.சொ.453), ''வேந்துவிடு...''(தொ.பொ.60), ''மாற்றருங் கூற்றஞ்...''(தொ.பொ.77), ''தந்தையும் தன்ஐயும்...''(தொ.பொ.135), ''அவன் சேர்பு...''(தொ.பொ.172), ''உண்டற் குரிய...''(தொ.பொ.210), ''வருத்த மிகுதி...''(தொ.பொ.222)

தெய்வச்சிலையார், ''ஐயுங் கண்ணும்...''(தொ.சொ.101) ஆகிய நூற்பாக்கள் இவ்வுத்தியில் அமைந்தன என்கின்றனர்.

## 7. எதிர்பொருள் உணர்த்தல்

*தொல்காப்பிய* உத்திகளின் பட்டியலில் 28ஆவதாக இடம்பெறும் இவ்வுத்திக்குப் பேராசிரியர் மட்டுமே *தொல்காப்பிய* நூற்பாக்களை மேற்கோளாகக்காட்டுகிறார். பிற உரையாசிரியர்கள் யாரும் தம் உரையில் இவ்வுத்தியைச் சுட்டவில்லை.

பேராசிரியர், ''மகரத் தொடர்மொழி...''(தொ.எ.82), ''கடிசொல் இல்லை...'' (தொ.சொ.446) ஆகிய இரு நூற்பாக்களை இவ்வுத்திக்குரியனவாகக் குறிப்பிடுகிறார்.

## 8. எதிரது போற்றல்

உத்திகளின் பட்டியலில் 16ஆவதாக இளம்பூரணர் இவ்வுத்தியைக் கொண்டார். பேராசிரியர் 15ஆவதாகக் கொண்டார். இளம்பூரணர் இவ்வுத்திக்கு மேற்கோள் காட்டவில்லை. தம் உரையிலும் சுட்டவில்லை. பேராசிரியர், நச்சினார்க்கினியர், சிவஞான முனிவர் ஆகியோர் இவ்வுத்தியைத் தம் உரைகளில் சுட்டிக் காட்டியுள்ளனர்.

பேராசிரியர், ''ஆறன் உருபின்...''(தொ.எ.116), ''ஆறன் உருபினும்...'' (தொ.எ.162), ''தன்மைச் சொல்லே...''(தொ.சொ.43), ''பல்லோர் படர்க்கை...'' (தொ.சொ.222),

நச்சினார்க்கினியர், ''மெய்யோ டியையினும்...'' (தொ.எ.10), ''உட்பெறு புள்ளி...'' (தொ.எ.14), ''அளபிறந் துயிர்த்தலும்...'' (தொ.எ.33), ''உருவினும்...''(தொ.எ.40), ''குன்றிசை மொழிவயின்...''(தொ.எ.41), ''நெட்டெழுத் தேழே...'' (தொ.எ.43), ''குறுமையும் நெடுமையும்...''(தொ.எ.50),''ஓரள பாகும்...''(தொ.எ.57), ''குற்றிய லுகரமும்...''(106), ''வினையெஞ்சு கிளவிக்கு...'' (தொ.சொ.426), ''பெயரெஞ்சு கிளவி...'' (தொ.சொ.427),

சிவஞான முனிவர், ''எழுத்தெனப் படுப...''(தொ.எ.1) ஆகிய நூற்பாக்களை இவ்வுத்திக்கு உரியனவாகச் சுட்டுகின்றனர்.

**9. ஒப்பக்கூறல்**

உத்திகளின் பட்டியலில் இளம்பூரணர் 10 ஆவதாக இவ்வுத்தியைக் கொண்டார். பேராசிரியர் 9 ஆவதாகக் கொண்டார். இவர்களோடு நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் ஆகியோர் இவ்வுத்தியைத் தம் உரைகளில் சுட்டிக் காட்டியுள்ளனர்.

இளம்பூரணர், ''மொழியெதிர் மொழிதல்...''(தொ.பொ.180),

பேராசிரியர், ''அவற்றுள், இன்னின் இகரம்...''(தொ.எ.121), ''வினையெஞ்சு கிளவியும்...'' (தொ.எ.205), ''அன்ன என்னும்...''(தொ.எ.211), ''மாமரக் கிளவியும்...'' (தொ.எ.232), ''மேற்கிளந் தெடுத்த...''(தொ.பொ.646),

நச்சினார்க்கினியர், ''எழுத்தெனப் படுப...''(தொ.எ.1), ''அவற்றுள், இன்னின் இகரம்...''(தொ.எ.121), ''கன்றலுஞ் செலவு...''(தொ.சொ.82), ''வஞ்சி தானே...'' (தொ.பொ.64), ''களவும் கற்பும்...'' (தொ.பொ.160),

தெய்வச்சிலையார், ''கண்ணுந் தோளும்...'' (தொ.பொ.62) ஆகிய நூற்பாக்களை இவ்வுத்திக்குரியனவாகச் சுட்டுகின்றனர்.

**10. ஒருதலை மொழி**

*தொல்காப்பிய* உத்திப் பட்டியலில் 11 ஆவதாக இடம்பெறும் இவ்வுத்தி இளம்பூரணர் கொண்டபாடம். ஆனால் அவர் தம் உரையில் எவ்விடத்திலும் இவ்வுத்திக்கு உரிய நூற்பாக்களைச் சுட்டவில்லை. நச்சினார்க்கினியர் மட்டுமே இவ்வுத்தியைச் சுட்டுகிறார்.

நச்சினார்க்கினியர், ''ஈரள பிசைக்கும்...''(தொ.சொ.276) என்னும் நூற்பாவை இவ்வுத்திக்குரித்தாக்குகிறார்.

**11. ஒருதலை மொழிதல்**

*தொல்காப்பியப்* பட்டியலில் 10 ஆவதாக இடம்பெறும் இவ்வுத்தி பேராசிரியர் கொண்டபாடம். இவருடன் நச்சினார்க்கினியரும் தம் உரையில் இவ்வுத்தியைச் சுட்டிக் காட்டியுள்ளார்.

பேராசிரியர், ''அ இ உ...''(தொ.எ.31), ''ஆணும் பெண்ணும்...'' (தொ.எ.304),

நச்சினார்க்கினியர், ''அ இ உ...''(தொ.எ.31) ஆகிய நூற்பாக்களை இவ்வுத்திக்கு உரியனவாகக் குறிப்பிடுகின்றனர். தொ.எ.31ஆம் நூற்பாவைப் பேராசிரியர், நச்சினார்க்கினியர் இருவரும் சுட்டிக்காட்டியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

**12. ஒரு தலையன்மை**

இவ்வுத்தியைப் பேராசிரியர் மட்டுமே பட்டியலில் 19ஆவதாகப் பாடம் கொண்டார். இளம்பூரணரும், கல்லாடனாரும் தம் உரைகளில் இவ்வுத்தியைக் குறிப்பிடுகின்றனர்.

இளம்பூரணர், ''இன்பமும் பொருளும்...''(தொ.பொ.89),

பேராசிரியர், ''குறியதன் முன்னர்...''(தொ.எ.38), ''இகர இறுதி...'' (தொ.எ.236), ''மறுதலைக் கடாஅ...''(தொ.பொ.650),

கல்லாடனார், ''பல்லா றாகப் பொருள்...'' (தொ.சொ.79), ஆகிய நூற்பாக்களை இவ்வுத்திக்கு உரியனவாகக் கூறுகின்றனர்.

**13. கூறிற்றென்றல்**

உத்திகளின் பட்டியலில் 18ஆவதாக இளம்பூரணர் இவ்வுத்தியைக் கொண்டார். பேராசிரியர் 17ஆவதாகக் கொண்டார். நச்சினார்க்கினியரும் இவ்வுத்தியைத் தம் உரைகளில் சுட்டிக் காட்டியுள்ளார்.

இளம்பூரணர், ''அவற்றுள், மாத்திரை வகையும்...'' (தொ.பொ.311),

பேராசிரியர், ''முதல்எனப் படுவது...''(தொ.பொ.19), ''அவற்றுள், மாத்திரை வகையும்...'' (தொ.பொ.311, ''கைக்கிளை

முதலா ஏழ்...''(தொ.பொ.486), ''மெய்பெறும் வகையே...'' (தொ.பொ.389), ''எண்வகை இயனெறி...'' (தொ.பொ.506),

நச்சினார்க்கினியர், ''முதல்எனப் படுவது...'' (தொ.பொ.19), ''பின்முறை யாகிய...'' (தொ.பொ.170) ஆகிய நூற்பாக்களை இவ்வுத்திக்குரியனவாகச் சுட்டுகின்றார்.

தொ.பொ.311ஆம் நூற்பாவினை இளம்பூரணர், பேராசிரியர் ஆகிய இருவரும், தொ.பொ.19 ஆம் நூற்பாவினைப் பேராசிரியர், நச்சினார்க்கினியர் ஆகிய இருவரும் இவ்வுத்திக்குச் சுட்டிக் காட்டியுள்ளதும் குறிப்பிடத்தக்கது.

**14. சொல்லினெச்சம் சொல்லியாங்குணர்த்தல்**

*தொல்காப்பிய* உத்திகளின் பட்டியலில் 29ஆவதாக இடம்பெறும் இவ்வுத்தியைப் பேராசிரியர், நச்சினார்க்கினியர் மட்டுமே எடுத்துக்காட்டுகின்றனர். ''எஞ்சிய வெல்லாம்...'' (தொ.எ.77) என்னும் ஒரே ஒரு நூற்பாவை இவ்விரு உரையாசிரியரும் இவ்வுத்திக்கு உரியதாகச் சுட்டுவது குறிப்பிடத்தக்கது.

**15. ஞாபகஞ்கூறல்**

உத்திகளின் பட்டியலில் 31ஆவதாக இடம்பெறும் இவ்வுத்திக்கு இளம்பூரணர், பேராசிரியர் இருவர் மட்டுமே நூற்பாக்களை எடுத்துக்காட்டுகின்றனர்.

இளம்பூரணர், ''ஒருபொருள் குறித்த...'' (தொ.சொ.42),

பேராசிரியர்,''எப்பெயர் முன்னரும்...'' (தொ.எ.129), ''மெய்பெறு மரபின்...'' (தொ.பொ.406) ஆகிய நூற்பாக்களை இவ்வுத்திக்கு உரியனவாக்குகின்றனர்.

**16. தந்து புணர்ந்துரைத்தல்**

பட்டியலில் 30ஆவதாக இடம்பெறும் இவ்வுத்தியைத் தம் உரையில் குறிப்பிடும் உரையாசிரியர்கள் இளம்பூரணர், பேராசிரியர், நச்சினார்க்கினியர் மூவரும் ஆவர்.

இளம்பூரணர், ''நெட்டெழுத்திம்பரும்...'' (தொ.எ.36),

பேராசிரியர், ''குறுமையும் நெடுமையும்...''(தொ.எ.50), ''அவற்றுள், மெய்யீறு எல்லாம்...''(தொ.எ.105), ''மெய் உயிர்...''(தொ.எ.140), ''நெடியதன் முன்னர்...'' (தொ.எ.161),

''இருவகை உகரமொடு...'' (தொ.பொ.313), ''அளபெடை அசைநிலை...''(தொ.பொ.325),

நச்சினார்க்கினியர் ''கவவொடு இயையின்...''(தொ.எ.70) ஆகிய நூற்பாக்களை இவ்வுத்திக்கு உரியனவாகக் கூறுகின்றனர்.

**17. தன்கோட் கூறல்**

*தொல்காப்பிய* உத்திகளின் பட்டியலில் 12ஆவதாக இளம்பூரணர் இவ்வுத்தியைக் கொண்டார். பேராசிரியர் 11ஆவதாகக் கொண்டார்.

இளம்பூரணர், ''விளி கொள்வதன்...''(தொ.சொ.64),

பேராசிரியர், ''குற்றெழுத்து ஐந்தும்...''(தொ.எ.44), ''சகரக் கிளவியும்...'' (தொ.எ.62), ''எல்லா எழுத்தும்...''(தொ.எ.102), ''அஃதிவண் நுவலா...'' (தொ.எ.103), ''அவைதாம், புணரிய னிலையிடை...''(தொ.சொ.245), ''முதல் கரு...''(தொ.பொ.3), '' நாடக வழக்கினும்...''(தொ.பொ.56) ஆகிய நூற்பாக்களை இவ்வுத்திக்கு உரியனவாகச் சுட்டுகின்றனர்.

**18. தான் குறியிடுதல்**

உத்திகளின் பட்டியலில் இளம்பூரணர் 19ஆவது உத்தியாகவும், பேராசிரியர் 18ஆவது உத்தியாகவும் இதனைப் பாடங் கொண்டனர். இவ்வுத்திக்குப் பேராசிரியர் மட்டுமே *தொல்காப்பிய* நூற்பாக்களை எடுத்துக் காட்டுத்தருகிறார். பிற உரையாசிரியர்கள் யாரும் தம் உரையில் இவ்வுத்தியைச் சுட்டிக்காட்டவில்லை.

பேராசிரியர், ''இரண்டாகுவதே, ஐயென...''(தொ.சொ.72), ''மூன்றனு மைந்தனும்...'' (தொ.சொ.88), ''பிரிநிலை வினையே...''(தொ.சொ.424) ஆகிய நூற்பாக்களை இவ்வுத்திக்குரியனவாகக் குறிப்பிடுகிறார்.

**19. தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல்**

பட்டியலில் 23ஆவதாக இடம்பெறும் இவ்வுத்தியைத் தம் உரையில் குறிப்பிடும் உரையாசிரியர்கள் இளம்பூரணர், பேராசிரியர், நச்சினார்க்கினியர் மூவரும் ஆவர்.

இளம்பூரணர், ''குற்றிய லுகரம் முறைப்பெயர்...''(தொ.எ.67),

பேராசிரியர், ''உருவென மொழியினும்...''(தொ.சொ.24), ''இரண்டாகுவதே, ஐயெனப்...'' (தொ.சொ.72), ''இதன திதுவிற்...''(தொ.சொ.106), ''செய்து செய்யூச்...'' (தொ.சொ.223),

நச்சினார்க்கினியர், ''இரண்டாகுவதே, ஐயெனப்...'' (தொ.சொ.72), ''செய்து செய்யூச்...''(தொ.சொ.223) ஆகிய இரு நூற்பாக்களை இவ்வுத்திக்குரியனவாகக் கூறுகின்றனர்.

தொ.சொ. 72, 223 ஆகிய நூற்பாக்களைப் பேராசிரியர், நச்சினார்க்கினியர் இருவரும் இவ்வுத்திக்குச் சுட்டிக் காட்டியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

**20. தொகுத்துக் கூறல் / தொகுத்தல் / தொகுத்துக் கூறுதல் / தொகுத்துக் காட்டல் / தொகுத்துணர்த்தல்**

தொல்காப்பியர் 'தொகுத்துக் கூறல்' எனக் குறிப்பிடும் இவ்வுத்தியை உரையாசிரியர்கள், 'தொகுத்தல்', 'தொகுத்துக் கூறுதல்', 'தொகுத்துக் காட்டல்', 'தொகுத்துணர்த்தல்' எனத் தம் உரைகளில் குறிப்பிடுகின்றனர். இவ்வுத்தியே உரையாசிரியர்களால் மிகுதியாகத் தம் உரைகளில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. 74 நூற்பாக்களின் உரைகளில் இவ்வுத்தியை உரையாசிரியர்கள் சுட்டிக் காட்டுகின்றனர். நூற்பாக்களின் எண்ணிக்கை மிகுதி கருதி ஒரு சில நூற்பாக்கள் இங்குக் காட்டப்படுகின்றன. ஏனைய நூற்பாக்களின் எண்கள் அடிக்குறிப்பில் கொடுக்கப்பட்டுள்ளன.[2]

இளம்பூரணர், ''எழுத்தெனப் படுப...''(தொ.எ.1), ''கைக்கிளை முதலா...'' (தொ.பொ.1),

பேராசிரியர், ''இருதிணை மருங்கின்...''(தொ.சொ.10), ''மாத்திரை எழுத்தியல்...'' (தொ.பொ.310),

நச்சினார்க்கினியர், ''அறுவகைப் பட்ட...''(தொ.பொ.74)

தெய்வச்சிலையார், ''நிலப் பெயர்...'' (தொ.சொ.162)

முதலிய நூற்பாக்களில் இவ்வுத்தியைச் சுட்டிக்காட்டியுள்ளனர்.

**21. நுதலியதறிதல்**

பட்டியலில் முதலாவதாக இடம்பெறும் இவ்வுத்திக்கு இளம்பூரணர், பேராசிரியர் இருவர் மட்டுமே *தொல்காப்பிய* நூற்பாக்களை மேற்கோள்காட்டுகின்றனர்.

இளம்பூரணர், ''எழுத்தெனப் படுப...''(தொ.எ.1),

பேராசிரியர், ''சிறப்பின் ஆகிய...'' (தொ.சொ.41), ''வேறுவினை...'' (தொ.சொ.46) ஆகிய நூற்பாக்களை இவ்வுத்திக்கு உரியதாகச் சுட்டுகின்றனர்.

**22. பல்பொருட்கேற்பின் நல்லது கோடல்**

உத்திகளின் பட்டியலில் 22ஆவதாக இடம்பெறும் இவ்வுத்தியைத் தம் உரையில் குறிப்பிடும் உரையாசிரியர்கள் பேராசிரியர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் மூவராவர். இளம்பூரணர் எந்த நூற்பாவையும் இவ்வுத்திக்கு உரியதாகக் கூறவில்லை.

பேராசிரியர், ''நும்மென் இறுதி...''(தொ.எ.188), ''ஒருவரென்னும்...'' (தொ.சொ.188), ''தன்மை சுட்டின்...'' (தொ.சொ.189), ''கூற்றும் மாற்றமும்...'' (தொ.பொ.458), ''சிதைவெனப் படுபவை...''(தொ.பொ.654),

நச்சினார்க்கினியர், '' அன்ன பிறவும் அவற்றொடு சிவணி...''(தொ.பொ.263)

தெய்வச்சிலையார், ''முற்படக் கிளத்தல்...''(தொ.சொ.39), ''பெயரினாகிய...'' (தொ.சொ.68), ''ஐந்தாகுவதே இன்னென...'' (தொ.சொ.75) ஆகிய நூற்பாக்களை இவ்வுத்திக்கு உரியனவாக்குகின்றனர்.

**23. பிறன் கோட்கூறல்**

*தொல்காப்பிய* உத்திகளின் பட்டியலில் 25ஆவதாக இடம் பெறும் இவ்வுத்தியை இளம்பூரணர், பேராசிரியர், நச்சினார்க்கினியர் ஆகிய உரையாசிரியர்கள் மூவரும் தம் உரையில் குறிப்பிடுகின்றனர்.

இளம்பூரணர், ''அஃது இவண் நுவலா...''(தொ.எ.103), ''வேற்றுமை தாமே...'' (தொ.சொ.63),

பேராசிரியர், ''அரையளபு குறுகல்...'' (தொ.எ.13), ''அளபிறந் துயிர்த்தலும்...'' (தொ.எ.33), ''எல்லா எழுத்தும்...''(தொ.எ.102), ''பண்ணை தோன்றிய...''(தொ.பொ.245), ''நாலிரண்டு...'' (தொ.பொ.246),

நச்சினார்க்கினியர், ''அரையளபு குறுகல்...''(தொ.எ.13), ''அளபிறந் துயிர்த்தலும்...''(தொ.பொ.465) ஆகிய நூற்பாக்களை இவ்வுத்திக்கு உரியனவாகச் சுட்டுகின்றனர்.

தொ.எ. 13, 33 ஆகிய இரு நூற்பாக்களைப் பேராசிரியர், நச்சினார்க்கினியர் இருவரும் இவ்வுத்திக்குச் சுட்டிக்காட்டியுள்ளனர்.

## 24. பிறனுடம்பட்டது தான் உடம்படுதல்

உத்திகளின் பட்டியலில் 14 ஆவதாக இளம்பூரணர் இவ்வுத்தியைக் கொண்டார். பேராசிரியர் 13 ஆவதாகக் கொண்டார். இவ்வுத்திக்குப் பேராசிரியர், நச்சினார்க்கினியர் இருவர் மட்டுமே தொல்காப்பிய நூற்பாக்களை எடுத்துக்காட்டுத் தருகின்றனர்.

பேராசிரியர், ''நீயென் பெயரும்...''(தொ.எ.251), ''பிண்டப்பெயரும்...'' (தொ.சொ.86),

நச்சினார்க்கினியர், ''பிண்டப் பெயரும்...''(தொ.சொ.86) ஆகிய நூற்பாக்களை இவ்வுத்திக்கு உரியனவாகச் சுட்டுகின்றார். பேராசிரியரைப் பின்பற்றித் தொ.சொ.86 ஆம் நூற்பாவை நச்சினார்க்கினியர் இவ்வுத்திக்கு எடுத்துக் காட்டியிருப்பது குறிப்பிடத்தக்கது.

## 25. பொருளிடையிடுதல்

*தொல்காப்பிய* உத்திகளின் பட்டியலில் 27ஆவதாக இடம்பெறும் இவ்வுத்தியைத் தம் உரையில் குறிப்பிடும் உரையாசிரியர்கள் இளம்பூரணர், பேராசிரியர், நச்சினார்க்கினியர் மூவர் ஆவர்.

இளம்பூரணர், ''பெண்மை சுட்டிய...'' (தொ.சொ.175),

பேராசிரியர், ''முறைப் பெயர்...'' (தொ.சொ.133), ''தானென் பெயரும்...'' (தொ.சொ.134), ''அவையல் கிளவி...''(தொ.சொ.436),

நச்சினார்க்கினியர், ''அவையல் கிளவி...''(தொ.சொ.436), ''ஒருமை சுட்டிய...'' (தொ.சொ.456) ஆகிய நூற்பாக்களை இவ்வுத்திக்கு உரியனவாகக் கூறுகின்றார்.

தொ.சொ.436ஆம் நூற்பாவினைப் பேராசிரியர், நச்சினார்க்கினியர் இருவரும் இவ்வுத்திக்குச் சுட்டிக்காட்டியுள்ளனர்.

**26. மறுதலை சிதைத்துத் தன்துணிபுரைத்தல்**

உத்திகளின் பட்டியலில் 24ஆவதாக இடம்பெறும் இவ்வுத்திக்கு இளம்பூரணர், பேராசிரியர் இருவர் மட்டுமே நூற்பாக்களை மேற்கோள் காட்டுகின்றனர்.

இளம்பூரணர், ''நெட்டெழுத் தேழே...''(தொ.எ.43),

பேராசிரியர், ''மூவள பிசைத்தல்...'' (தொ.எ.5), ''நீட்டம் வேண்டின்...'' (தொ.எ.6), ''புள்ளி யில்லா...'' (தொ.எ.17), ''மெய்யின் வழியது...''(தொ.எ.18), ''குன்றிசை மொழிவயின்...'' (தொ.எ.41), ''மொழிப்படுத்து இசைப்பினும்...'' (தொ.எ.53) ஆகிய நூற்பாக்களையும் இவ்வுத்திக்கு உரியனவாகக் குறிப்பிடுகின்றனர்.

**27. முடிந்ததுகாட்டல்**

*தொல்காப்பிய* உத்திகளின் பட்டியலில் 20ஆவதாக இடம்பெறுவதாக இதனைப் பேராசிரியர் பாடம் கொண்டார். இவருடன் நச்சினார்க்கினியரும் இவ்வுத்தியைத் தம் உரைகளில் குறிப்பிடுகிறார்.

பேராசிரியர், ''கண்ணிமை நொடியென...''(தொ.எ.7), ''ஒன்றறிவதுவே...'' (தொ.பொ.571),

நச்சினார்க்கினியர், ''கண்ணிமை நொடியென...''(தொ.எ.7), ''செய்யுண் மருங்கினும்...''(தொ.சொ.456) ஆகிய நூற்பாக்களை இவ்வுத்திக்குரியனவாகக் காட்டுகின்றனர்.

தொ.எ.7ஆவது நூற்பாவினைப் பேராசிரியர், நச்சினார்க்கினியர் இருவரும் இவ்வுத்திக்குச் சுட்டிக்காட்டியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

**28. முந்து மொழிந்ததன் தலைதடுமாற்று**

உத்திகளின் பட்டியலில் 9ஆவதாக இளம்பூரணர் இவ்வுத்தியைக் கொண்டார். பேராசிரியர் 8ஆவதாகக் கொண்டார். இவ்வுத்தியைத் தம் உரையில் குறிப்பிடும் உரையாசிரியர்கள் சேனாவரையர், பேராசிரியர், நச்சினார்க்கினியர், கல்லாடனார் ஆவர். இளம்பூரணர் இவ்வுத்திக்குரிய நூற்பாவைச் சுட்டவில்லை. ''புள்ளி மயங்கியலுட் கண்டுகொள்க'' என்கிறார்.

சேனாவரையர், ''ஏனைக்கிளவி...''(தொ.சொ.187),

பேராசிரியர், ''புள்ளி யில்லா..''(தொ.எ.17), ''பன்னீர் உயிரும்...'' (தொ.எ. 59), ''உயிர்மெய் யல்லன...''

(தொ.எ.60), ''மூன்றுதலை யிட்ட...''(தொ.எ.104), ''அவைதாம், இன்னேவற்றே...''(தொ.எ.120), ''ஆசிரியம், வஞ்சி...''(தொ.பொ.410),

நச்சினார்க்கினியர், ''பண்புதொக வரூஉம்...''(தொ.சொ.412),

கல்லாடனார், ''அ ஆவென...''(தொ.சொ.212) ஆகிய நூற்பாக்களை இவ்வுத்திக்குரியனவாகச் சுட்டுகின்றனர்.

இளம்பூரணர், இவ்வுத்தியைப் 'புள்ளி மயங்கியலில் கண்டுகொள்க' எனக் கூறினார். ஆனால் அப்பகுதிக்கு இவர் கூறிய உரையில் இவ்வுத்தியைக் காட்டவில்லை. இதனால் கி.நாச்சிமுத்து,

> *முந்து மொழிந்ததன் தலை தடுமாற்றம் எனத் தொல்காப்பியர் கூறுவதை இளம்பூரணர் பத்து வேறுபட்ட வாக்கிய வாய்பாட்டால் கூறுகிறாரே ஒழியத் தொல்காப்பியக் கலைச் சொல்லைக் கையாளவே இல்லை.*[3]

எனக் குறிப்பிடுகிறார். ஆனால் இவரும் பத்து வேறுபட்ட வாக்கிய வாய்பாடுகள் யாவை என்பதைக் குறிப்பிடவில்லை.

**29. முறை பிறழாமை**

உத்திப்பட்டியலில் 12ஆவதாக இடம்பெறுவதாக இவ்வுத்தியைப் பேராசிரியர் பாடங்கொண்டார். இவ்வுத்திக்கு இவர் மட்டுமே *தொல்காப்பிய* நூற்பாக்களை எடுத்துக்காட்டுகிறார்.

பேராசிரியர், ''எழுத்தெனப்படுவ..''(தொ.எ.1), ''அவற்றுள், அ இ உ...''(தொ..எ.3), ''அவைதாம், பெயர் ஐ, ஒடு...''(தொ.சொ.65), ''கைக்கிளை முதலா..'' (தொ.பொ.1), ''அவற்றுள், நடுவண் ஐந்திணை...''(தொ.பொ.2), ''மரபு நிலை திரிதல்...'' (தொ.பொ.636) ஆகிய நூற்பாக்களை இவ்வுத்திக்குரியது என்கிறார்.

**30. மொழிந்த பொருளோடு ஒன்றவவ்வயின் மொழியாததனை முட்டின்று முடித்தல்**

பேராசிரியர், உத்திகளின் பட்டியலில் 5ஆவதாக இவ்வுத்தியைப் பாடம்கொண்டார். இவ்வுத்தியைத் தம் உரையில் குறிப்பிடுவோர் பேராசிரியர், நச்சினார்க்கினியர், சிவஞான முனிவர் ஆகியோர் மூவர் ஆவர்.

பேராசிரியர், ''ரஃகான் ஒற்றும்...''(தொ.சொ.7), ''எடுத்த மொழி யினம்...'' (தொ.சொ.61), ''வெண்சீர் ஈற்றசை...'' (தொ.பொ.337), ''சீரியல் மருங்கின்...'' (தொ.பொ.362),

நச்சினார்க்கினியர், ''ஆஏஓ...'' (தொ.எ.32), ''சார்ந்து வரினல்லது...'' (தொ.எ.101), ''அன்று வருகாலை...''(தொ.எ.259), ''ரஃகான் ஒற்றும்...'' (தொ.சொ.7), ''கூதிர் வேனில்...'' (தொ.பொ.75), ''காமநிலை யுரைத்தலும்...'' (தொ.பொ.175),

சிவஞானமுனிவர், ''எழுத்தெனப் படுப...'' (தொ.எ.1) ஆகிய நூற்பாக்களை இவ்வுத்திக்குக் குறிப்பிடுகின்றனர்.

தொ.சொ.7 ஆவது நூற்பாவைப் பேராசிரியர், நச்சினார்க்கினியர் இருவரும் இவ்வுத்திக்குச் சுட்டிக்காட்டியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

### 31. மொழிந்த பொருளோடு ஒன்றவைத்தல்

*தொல்காப்பிய* உத்திகளின் பட்டியலில் 5ஆவதாக இடம்பெறுவதாக இவ்வுத்தியை இளம்பூரணர் பாடம் கொண்டார். இவருடன் தெய்வச்சிலையாரும் இவ்வுத்தியைத் தம் நூற்பாக்களில் சுட்டிக்காட்டுகிறார்.

இளம்பூரணர், ''புணர்தல் பிரிதல்...''(தொ.பொ.16), ''அகத்திணை மருங்கின்...'' (தொ.பொ.59),

தெய்வச்சிலையார், ''ஒரு பொருள் குறித்த...''(தொ.சொ.42), ''பலவயி னானும்...'' (தொ.சொ.51) ஆகிய நூற்பாக்களை இவ்வுத்திக்கு உரியனவாகச் சுட்டுகின்றனர்.

### 32. மொழியாததனை முட்டின்று முடித்தல்

உத்திப் பட்டியலில் 6ஆவதாக இடம்பெறுவதாக இவ்வுத்தியை இளம்பூரணர் பாடங்கொண்டார். இவர், ''ஒன்றே வேறே...''(தொ.பொ.90), ''சூத்திரத் துட்பொருள்...'' (தொ.பொ.649) ஆகிய இரு நூற்பாக்களையும் இவ்வுத்திக்குரியனவாகக் கூறுகிறார்.

### 33. மொழிவாமென்றல்

*தொல்காப்பிய* உத்திகளின் பட்டியலில் இதனை 17ஆவதாக இளம்பூரணர் பாடங்கொண்டார். பேராசிரியர் 16ஆவதாகப் பாடங்கொண்டார். இவ்விருவர் மட்டுமே இவ்வுத்திக்குத் *தொல்காப்பிய* நூற்பாக்களை மேற்கோள்காட்டுகின்றனர்.

இளம்பூரணர், ''புணரியல் நிலையிடை...''(தொ.எ.35),

பேராசிரியர், இந்நூற்பாவோடு, ''இடைப்படிற் குறுகும்...'' (தொ.எ.37), ''கசதப முதலிய...'' (தொ.எ.144), ''மெல்லெழுத்து மிகுவழி...'' (தொ.எ.158), ''அவ்வே, இவ்வென அறிதற்கு...'' (தொ.சொ.116) ஆகிய நூற்பாக்களை இவ்வுத்திக்கு உரியனவாகக் குறிப்பிடுகின்றனர்.

**34. வகுத்து மெய்ந்நிறுத்தல்**

பட்டியலில் 4ஆவதாக இடம்பெறும் இவ்வுத்திக்கு,

இளம்பூரணர், ''அவற்றுள், அஇஉ...''(தொ.எ.3),

பேராசிரியர், ''புள்ளி யில்லா...''(தொ.எ.17), ''சொல்லெனப் படுவ...'' (தொ.சொ.155), ''இடைச்சொற் கிளவியும்...''(தொ.சொ.156), ''அவற்றுள், பெயரெனப் படுபவை...''(தொ.சொ.157), ''இயற்சொல் திரிசொல்...'' (தொ.சொ.397), ''இயலசை மயக்கம்...''(தொ.பொ.321), ''இயற்சீர் இறுதிமுன்...'' (தொ.பொ.327), ''வெண்பா உரிச்சீர்...'' (தொ.பொ.331), ''கலித்தளை மருங்கின்...'' (தொ.பொ.332) ஆகிய நூற்பாக்களைக் குறிப்பிடுகின்றனர்.

**35. வந்தது கொண்டு வாராததுணர்த்தல்**

உத்திகளின் பட்டியலில் 7ஆவதாக இடம்பெறுவதாக இவ்வுத்தியைப் பேராசிரியர் பாடங்கொண்டார். இவ்வுத்தியைத் தம் உரையில் குறிப்பிடும் உரையாசிரியர்கள், இளம்பூரணர், பேராசிரியர், நச்சினார்க்கினியர், ஆகியோராவர்.

இளம்பூரணர், ''கொடிநிலை கந்தழி...'' (தொ.பொ. 85),

பேராசிரியர், ''வினையெஞ்சு கிளவியும்...'' (தொ.எ.205), ''உயர்திணை யென்மனார்...'' (தொ.சொ.1), ''எஞ்சிய மூன்றும்...'' (தொ.சொ.433),

நச்சினார்க்கினியர், ''இறப்பினிகழ்வின்...''(தொ.சொ.421), ஆகிய நூற்பாக்களை இவ்வுத்திக்குரியனவாகக் குறிப்பிடுகின்றனர்.

**36. வந்தது கொண்டு வாராதது முடித்தல்**

*தொல்காப்பிய* உத்திகளின் பட்டியலில் 8ஆவதாக இடம்பெறுவதாக இவ்வுத்தியை இளம்பூரணர் பாடங்கொண்டார். இவருடன் தெய்வச்சிலையாரும் இவ்வுத்தியைத்தம் உரையால் சுட்டிச் செல்கிறார்.

இளம்பூரணர்,''எந்நில மருங்கின்...'' (தொ.பொ.21), ''ஆயர் வேட்டுவர்...'' (தொ.பொ.23), ''கரணத்தின் அமைந்து...'' (தொ.பொ.144), ஒருசீ ரிடையிட்டு...'' (தொ.பொ.403), ''இவ்விடத் திம்மொழி...'' (தொ.பொ.508),

தெய்வச்சிலையார், ''அடைசினை...'' (தொ.சொ.26), ''ஒருவரைக் கூறும்...'' (தொ.சொ.27), ''இயற்பெயர்க் கிளவியும்...'' (தொ.செ.38), ''அம்ம வென்னும்அசை...'' (தொ.சொ.150), ''நிலப்பெயர்...'' (தொ.சொ.162), ''எஞ்சிய கிளவி...'' (தொ.சொ.220), ''என்று மெனவும்...'' (தொ.சொ.289), ''பொருட்குப் பொருடெரி...'' (தொ.சொ.385), ''மொழிபொருட் காரணம்...'' (தொ.சொ.388), ''த ந து எ எனும்...'' (தொ.சொ.404) ஆகிய நூற்பாக்களை இவ்வுத்திக்குரியனவாகக் கூறுகின்றனர்.

## 37. வாராததனான் வந்தது முடித்தல்

உத்திகளின் பட்டியலில் 7ஆவதாக இளம்பூரணர் இவ்வுத்தியைக் கொண்டார். பேராசிரியர் 6ஆவதாகக் கொண்டார். பேராசிரியர், நச்சினார்க்கினியர் இருவர் மட்டுமே இவ்வுத்திக்குத் *தொல்காப்பிய* நூற்பாக்களை எடுத்துக்காட்டுத் தருகின்றனர்.

பேராசிரியர், ''அவைதாம், குற்றியலிகரம்...'' (தொ.எ.2), ''ஆ ஏ ஓ...'' (தொ.எ.32), ''எல்லாம் என்னும்...'' (தொ.எ.190), ''தொடரல் இறுதி...'' (தொ.எ.215), ''மாறுகொள் எச்சம்...'' (தொ.எ.291) ''செய்து செய்யூ...'' (தொ.சொ.223), ''பிரிநிலை வினையே...'' (தொ.சொ.424),

நச்சினார்க்கினியர், ''தொடரல் இறுதி...'' (தொ.எ.215) ஆகிய நூற்பாக்களை இவ்வுத்திக்குரியனவாகக் குறிப்பிடுகின்றனர். தொ.எ.215ஆம் நூற்பாவைப் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் சுட்டிக்காட்டியிருப்பது குறிப்பிடத்தக்கது

## ஒரே நூற்பாவிற்குப் பல்வேறு உத்திகள்

ஓர் உரையாசிரியர் தம் உரையில் ஒரே நூற்பாவிற்கு ஒன்றுக்கும் மேற்பட்ட உத்திகளைப் பொருத்திக்காட்டுகின்ற நிலை *தொல்காப்பிய* உரைகளில் உள்ளது. அவ்வகையில் உரையாசிரியர்களின் உரைக்குரிய நூற்பாக்களையும் அவற்றிற் குரியனவாகச் சுட்டும் உத்திகளையும் இங்குத் தொகுத்துக் காண்பது தேவையாகின்றது.

எழுத்து.1

எழுத்தெனப்படுப
அகரமுதல் னகரவிறுவாய்
முப்பஃ தென்ப

என்னும் இந்நூற்பாவிற்கு 'நுதலியதறிதல்', 'தொகுத்துக்கூறல்' என்னும் இரு உத்திகளை இளம்பூரணர் குறிப்பிடுகிறார்.

நச்சினார்க்கினியரும் இரண்டு உத்திகளை இந்நூற்பாவிற்குக் காட்டுகிறார். அவை,'ஒப்பக்கூறல்', 'உடம்பொடு புணர்தல்' என்பன.

சிவஞான முனிவர் இந்நூற்பா விளக்கத்தில் மேற்கண்ட பழைய உரையாசிரியர்கள் குறிப்பிடாத 'எதிரது போற்றல்', 'மொழிந்த பொருளோடு ஒன்றவவ்வயின் மொழியாததனை முட்டின்று முடித்தல்' என்னும் இரண்டு உத்திகளைக் கூறுகிறார்.

இவற்றிலிருந்து இந்த ஒரே நூற்பாவிற்கு 'நுதலியதறிதல்', 'தொகுத்துக்கூறல்', 'ஒப்பக் கூறல்', 'உடம்பொடு புணர்த்தல்', 'எதிரது போற்றல்', 'மொழிந்த பொருளோடு ஒன்ற அவ்வயின் மொழியாததனை முட்டின்று முடித்தல்' ஆகிய ஆறு உத்திகளை ஆளுக்கு இரண்டாக மூன்று உரையாசிரியர்கள் கூறுவதை அறிய முடிகிறது.

எழுத்து.7

கண்ணிமை நொடியென அவ்வே மாத்திரை
நுண்ணிதின் உணர்ந்தோர் கண்ட வாறே.

என்னும் நூற்பாவிற்கு நச்சினார்க்கினியர் பேராசிரியரை மேற்கோள் காட்டி,

*கண்ணிமைக்கும் நொடிக்கும் அளவு ஆராயின் வரம்பின்றி ஓடும் என்று கருதி 'நுண்ணிதின் உணர்ந்தோர் கண்டவாறு என்று 'முடிந்தது காட்டல்' என்னும் உத்தி கூறினார். இது ஆணை கூறுதலுமாம்.*

என 'முடிந்தது காட்டல்', 'ஆணை கூறல்' என்னும் இரண்டு உத்திகளையும் காட்டுகிறார்.

எழுத்து.17

புள்ளி யில்லா எல்லா மெய்யும்
உருவுரு வாகி அகரமோடு உயிர்த்தலும்

ஏனை உயிரோடு உருவுதிரிந் துயிர்த்தலும்
ஆயீ ரியல உயிர்த்த லாறே"

எனும் நூற்பா மூன்று உத்திகளுக்கு உரியதெனப் பேராசிரியர் கூறுகிறார். இந்நூற்பாவில், "புள்ளி யில்லா எல்லா மெய்யும்" எனும் முதல் அடியை எடுத்துக்காட்டி, இதில் மெய் முதற் கூறினமையின் 'முந்து மொழிந்ததன் தலை தடுமாற்று' உத்தியாயிற்று என்கிறார். "உருவுரு வாகி அகரமோடு உயிர்த்தலும்" என்னும் இரண்டாவது அடியைச் சேர்த்து 'வகுத்து மெய்ந்நிறுத்தல்' 'மறுதலை சிதைத்துத் தன்றுணிபுரைத்தல்' ஆகிய உத்திகளுக்கு உரியதாகச் சுட்டிக்காட்டுகிறார்.

**எழுத்து.33**

அளபிறந்து உயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்
உளவென மொழிப இசையொடு சிவணிய
நரம்பின் மறைய என்மனார் புலவர்

என்னும் இந்நூற்பாவிற்கு நச்சினார்க்கினியர், 'பிறன்கோட்கூறல்', 'எதிரது போற்றல்' என்னும் இரு உத்திகளும் உரியன என்கிறார்.

**எழுத்து.36**

நெட்டெழுத்து இம்பரும் தொடர்மொழி யீற்றும்
குற்றிய லுகரம் வல்லாறு ஊர்ந்தே

என்னும் முழு நூற்பாவையும் பேராசிரியர் 'உய்த்துக் கொண்டுணர்த்தல்' உத்திக்குரியது என்கிறார். ஆனால் இந்நூற்பாவின் இரண்டாவது அடியை மட்டும் 'அதிகார முறைமைக்கு' எடுத்துக்காட்டுகிறார்.

**எழுத்து.102**

எல்லா எழுத்தும் வெளிப்படக் கிளந்து

எனத்தொடங்கும் நூற்பாவின் "அளபிற் கோடல் அந்தணர் மறைத்து" என்னும் இறுதி அடியைப் பேராசிரியர் 'தன்கோட்கூறல்', 'பிறன்கோட்கூறல்' ஆகிய இரண்டு உத்திகளுக்கும் உரியதென்கிறார்.

**எழுத்து.161**

நெடியதன் முன்னர் ஒற்றுமெய் கெடுதலும்
குறியதன் முன்னர்த் தன் உருபு இரட்டலும்
அறியத் தோன்றிய நெறியியல் என்ப

என்னும் நூற்பாவின் முதல் அடியைப் பேராசிரியர் 'தந்து புணர்ந்துரைத்தல்' உத்திக்கும், இறுதி இரு அடிகளை 'அறியாதுடம்படல்' உத்திக்கும் எடுத்துக்காட்டாகத் தருகிறார்.

எழுத்து.205

> வினையெஞ்சு கிளவியும் உவமக் கிளவியும்
> என என் எச்சமும் சுட்டின் இறுதியும்
> ஆங்க என்னும் உரையசைக் கிளவியும்
> ஞாங்கர்க் கிளந்த வல்லெழுத்து மிகுமே

என்னும் இந்நூற்பாவின் முதல் அடியைப் பேராசிரியர் 'ஒப்பக் கூறல்' உத்திக்கும், இறுதியடியை 'வந்தது கொண்டு வாராததுணர்த்தல்' உத்திக்கும் எடுத்துக்காட்டுகிறார்.

சொல்.7

> ரஃகான் ஒற்றும் பகர இறுதியும்
> மாரைக்கிளவி யுளப்பட மூன்றும்
> நேரத் தோன்றும் பலரறி சொல்லே

என்னும் நூற்பாவிற்கு நச்சினார்க்கினியர் 'மொழிந்த பொருளோடு ஒன்ற வவ்வயின் மொழியாததனை முட்டின்று முடித்தல்' உத்தியையும் 'பகர இறுதி' என்பதற்கு 'உடம்பொடு புணர்த்தல்' உத்தியையும் கூறுகிறார்.

சொல்.64

> விளிகொள் வதன்கண் விளியோ டெட்டே

என்னும் நூற்பாவினை இளம்பூரணர், 'தன்கோட் கூறல்', 'ஆணை கூறல்' ஆகிய இரு உத்திகளுக்குரியனவாகக் கூறுகிறார்.

சொல்.72

> இரண்டாகுவதே
> ஐ யெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி...

எனத் தொடங்கும் நூற்பாவின் முதல் இரண்டு அடிகளைத் 'தான் குறியிடுதல்' என்னும் உத்திக்கு உரியன என்கிறார் பேராசிரியர். இந்நூற்பாவின் இடையில் வரும் "காப்பின் ஒப்பின் ஊர்தியின் இழையின்" என்னும் அடியைத் 'தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல்' என்னும் உத்திக்கு உரியது என்கிறார் அவர்.

**சொல்.162**

நிலப்பெயர் குடிப்பெயர் குழுவின் பெயரே

எனத் தொடங்கும் நூற்பாவிற்குத் தெய்வச்சிலையார் இரண்டு உத்திகளைக் காட்டுகிறார். அவர் "குடிப்பெயர்" என்றவிடத்து 'வந்தது கொண்டு வாராதது முடித்தல்' உத்தியையும், "இயற்பெயர்" என்றவிடத்துத் 'தொகுத்துக் கூறல்' உத்தியையும் எடுத்துக்காட்டாகத் தருகிறார்.

**சொல்.223**

செய்து செய்யூச் செய்பு செய்தெனச்
செய்யியர் செய்யிய செயின்செயச் செயற்கென
அவ்வகை யொன்பதும் வினையெஞ்சு கிளவி

என்னும் நூற்பா முழுவதையும் பேராசிரியர், 'தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல்' உத்திக்கு எடுத்துக்காட்டாகத் தருகிறார். 'வாராததனான் வந்தது முடித்தல்' உத்திக்கு மேற்கண்ட நூற்பாவின் இறுதியடியை மட்டும் சான்றுகாட்டுகிறார்.

**சொல்.424**

பிரிநிலை வினையே பெயரே யொழியிசை
நெறிப்படத் தோன்று மெஞ்சு பொருட் கிளவி...

என்னும் நூற்பாவின் இறுதி அடியைப் பேராசிரியர் 'வாராததனான் வந்தது முடித்தல்', 'தான் குறியிடுதல்' என்னும் இரண்டு உத்திகளுக்கும் எடுத்துக்காட்டாகத் தருகிறார்.

**பொருள்.77**

மாற்றருங் கூற்றஞ் சாற்றிய பெருமையும்

எனத்தொடங்கும் நூற்பாவில், நச்சினார்க்கினியர் "இன்னன்று இரங்கிய மன்னையானும்" என்னும் அடிக்கு 'உடம்பொடு புணர்த்தல்' உத்தியையும்,

மாய்பெருஞ் சிறப்பிற் புதல்வற் பயந்த
தாய்தப வருஉந் தலைப்பெயல் நிலையும்

என்னும் அடிகளுக்கு 'உய்த்துக்கொண்டுணர்தல்' உத்தியையும் பொருத்திக் காட்டுகிறார்.

**பொருள். 406**

**மெய்பெறு மரபின் தொடைவகை தாமே**
**ஐயீ ராயிரத் தாறைஞ் ஞூற்றொடு**
**தொண்டுதலை யிட்ட பத்துக்குறை யெழுநூற்**
**றொன்பஃ தென்ப உணர்ந்திசி னோரே"**

என்னும் நூற்பாவினைப் பேராசிரியர் 'ஞாபகங்கூறல்', 'தொகுத்துக் கூறல்' என்னும் இரு உத்திகளுக்குச் சான்று காட்டுகிறார்.

**பொருள்.646**

**மேற்கிளந் தெடுத்த யாப்பினுட் பொருளொடு**

எனத்தொடங்கும் நூற்பா 'ஒப்பக்கூறல்', 'தொகுத்துக்கூறல்' ஆகிய இரு உத்திகளுக்கு உரியதெனப் பேராசிரியர் குறிப்பிடுகிறார்.

**ஒரே நூற்பாவும் உத்தி வேறுபாடும்**

ஒரு நூற்பாவிற்கு ஓர் உரையாசிரியர் காட்டிய உத்திக்கு மாறாக மற்றோர் உரையாசிரியர் தம் கருத்திற்கேற்பவும் சிந்தனைப் போக்கிற்கேற்பவும் வேறோர் உத்தியைக் காட்டும் போக்கைத் *தொல்காப்பிய* உரைகளில் காணமுடிகிறது. அத்தகைய நூற்பாக்களையும் அவற்றிற்கு உரையாசிரியர்கள் சுட்டும் உத்திகளையும் காண்பதாக இப்பகுதி அமைகிறது.

**எழுத்து.1**

**எழுத்தெனப்படுப**
**அகர முதல**
**னகர இறுவாய் முப்பஃதென்ப**
**சார்ந்து வரல்மரபின் மூன்றலங் கடையே**

என்னும் இந்நூற்பாவிற்கு,

இளம்பூரணர், 'நுதலியதறிதல்', 'தொகுத்துக் கூறல்' என்னும் இரு உத்திகளையும், நச்சினார்க்கினியர், 'ஒப்பக் கூறல்', 'உடம்பொடு புணர்த்தல்' என்னும் இரு உத்திகளையும்,

சிவஞான முனிவர், 'எதிரது போற்றல்', 'மொழிந்த பொருளோடு ஒன்ற வவ்வயின் மொழியாததனை முட்டின்று முடித்தல்' என்னும் இரு உத்திகளையும் சுட்டிக் காட்டுவது முன்னர்க் கூறப்பட்டது. இவர்களுடன்,

பேராசிரியர், 'அதிகார முறைமை' என்னும் உத்திக்கு ''அகர முதல னகர இறுவாய்...'' என்னும் அடி உரியது என்கிறார்.

**எழுத்து.3**

அ, இ, உ,
எ, ஒ, என்னும் அப்பால் ஐந்தும்
ஓரளபு இசைக்கும் குற்றெழுத் தென்ப

என்னும் நூற்பாவிற்கு உரிய உத்தியாக,

இளம்பூரணர், 'வகுத்து மெய்ந்நிறுத்தல்' என்பதையும்,

பேராசிரியர், 'முறைபிறழாமை' என்பதையும் சுட்டுகின்றனர்.

**எழுத்து.7**

கண்ணிமை நொடியென அவ்வே மாத்திரை
நுண்ணிதின் உணர்ந்தோர் கண்ட வாறே

என்னும் நூற்பாவிற்கு உரிய உத்தியாகப் பேராசிரியர், 'முடிந்தது காட்டல்' என்பதையும், நச்சினார்க்கினியர், 'முடிந்தது காட்டல்', 'ஆணை கூறல்' என்பனவற்றையும் குறிப்பிடுகின்றனர். இவ்விருவரும் இரண்டாம் அடிக்கே இவ்வுத்திகளைச் சுட்டுகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது.

**எழுத்து.32**

ஆ, ஏ, ஓ இம்மூன்றும் வினா

என்னும் நூற்பாவிற்கு உரிய உத்தியாக,

பேராசிரியர், 'வாராததனான் வந்தது முடித்தல்' என்பதையும், நச்சினார்க்கினியர், 'மொழிந்த பொருளோடு ஒன்றவவ்வயின் மொழியாததனை முட்டின்று முடித்தல்' என்பதையும் கூறுகின்றனர்.

**எழுத்து.33**

அளபிறந்து உயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்
உளவென மொழிப இசையொடு சிவணிய
நரம்பின் மறைய என்மனார் புலவர்

என்னும் நூற்பாவிற்கு உரிய உத்தியாக, பேராசிரியர், 'பிறன்கோட் கூறல்' என்பதையும், நச்சினார்க்கினியர், 'பிறன்கோட் கூறல்', 'எதிரது போற்றல்' என்பனவற்றையும் சுட்டுகின்றனர்.

நச்சினார்க்கினியர், பேராசிரியர் கூறிய 'பிறன்கோட் கூறல்' என்பதையும் உடன்பட்டது குறிப்பிடத்தக்கது.

**எழுத்து.36**

> நெட்டெழுத்து இம்பரும் தொடர்மொழி ஈற்றும்
> குற்றிய லுகரம் வல்லாறு ஊர்ந்தே

என்னும் நூற்பாவிற்கு உரிய உத்தியாக,

இளம்பூரணர், 'தந்துபுணர்ந்துரைத்தல்' என்பதையும்,

பேராசிரியர், 'உய்த்துக்கொண்டுணர்த்தல்', 'அதிகார முறைமை' ஆகியவற்றையும்,

நச்சினார்க்கினியர், 'அதிகார முறைமை' என்பதையும் சுட்டுகின்றனர். இவர்களில் பேராசிரியர், 'அதிகார முறைமை' என்பதற்கு இந்நூற்பாவின் இரண்டாம் அடியை மட்டும் காட்டுகிறார். 'உய்த்துக்கொண்டுணர்த்தல்' என்பதற்கு முழு நூற்பாவையும் குறிப்பிடுகிறார். பேராசிரியரை அடியொற்றி நச்சினார்க்கினியர், இரண்டாம் அடிக்கு மட்டும் 'அதிகார முறைமை'யைச் சுட்டுகிறார்.

**எழுத்து.41**

> குன்றி*ச மொழிவயின் நின்றிசை நிறைக்கும்
> நெட்டெழுத்து இம்பர் ஒத்தகுற் றெழுத்தே

எனும் நூற்பாவிற்கு உரிய உத்தியாக,

பேராசிரியர், 'மறுதலை சிதைத்துத் தன்றுணிபுரைத்தல்' என்பதையும்,

நச்சினார்க்கினியர், 'எதிரது போற்றல்' என்பதையும் குறிப்பிடுகின்றனர். பேராசிரியர் முதல் அடியை மட்டும் இவ்வுத்திக்கு உரியதென்கிறார்.

**எழுத்து.50**

> குறுமையும் நெடுமையும் அளவிற் கோடலின்
> தொடர் மொழியெல்லாம் நெட்டெழுத் தியல

என்னும் நூற்பாவிற்கு உரிய உத்தியாக, பேராசிரியர், 'தந்து புணர்ந்துரைத்தல்' என்பதையும்,

நச்சினார்க்கினியர் 'எதிரது போற்றல்' என்பதையும் சுட்டிக்காட்டுகின்றனர்.

எழுத்து.67

குற்றிய லுகரம் முறைப்பெயர் மருங்கின்
ஒற்றிய நகரமிசை நகரமொடு முதலும்

என்னும் நூற்பாவிற்கு உரிய உத்தியாக,

இளம்பூரணர், 'தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல்' என்பதையும், பேராசிரியர், 'உய்த்துக் கொண்டுணர்த்தல்' என்பதையும் காட்டுகின்றனர்.

எழுத்து.103

அஃதிவண் நுவலாது எழுந்து புறத்து இசைக்கும்
மெய்தெரி வளியிசை அளபுநுவன் றிசினே

என்னும் நூற்பாவிற்கு உரிய உத்தியாக,

இளம்பூரணர், 'பிறன்கோட் கூறல்' என்பதையும்,

பேராசிரியர் 'தன்கோட் கூறல்' என்பதையும் காட்டுகின்றனர்.

எழுத்து.205

வினையெஞ்சு கிளவியும் உவமக் கிளவியும்
எனஎன் எச்சமும் சுட்டின் இறுதியும்
ஆங்க என்னும் உரையசைக் கிளவியும்
ஞாங்கர்க் கிளந்த வல்லெழுத்து மிகுமே

என்னும் நூற்பாவிற்கு உரிய உத்தியாக,

இளம்பூரணர், 'அதிகார முறைமை' என்பதையும்,

பேராசிரியர், 'ஒப்பக் கூறல்', 'வந்தது கொண்டு வாராததுணர்த்தல்' ஆகியவற்றையும் மேற்கோள் காட்டுகின்றனர். இவர்களில் பேராசிரியர், 'ஒப்பக் கூறல்' உத்திக்கு முதல் அடியையும், 'வந்தது கொண்டு வாராததுணர்த்தல்' உத்திக்கு இறுதி அடியையும் குறிப்பிடுகிறார்.

சொல்.7

ரஃகான் ஒற்றும் பகர இறுதியும்
மாரைக் கிளவி யுளப்பட மூன்றும்
நேரத் தோன்றும் பலரறி சொல்லே

என்னும் நூற்பாவிற்கு உரிய உத்தியாக,

பேராசிரியர், 'மொழிந்த பொருளோடு ஒன்ற வவ்வயின் மொழியாததனை முட்டின்று முடித்தல்' என்பதையும்,

நச்சினார்க்கினியர், 'உடம்பொடு புணர்த்தல்' என்பதையும் கூறுகின்றனர். இவர்களில் பேராசிரியர், இந்நூற்பாவின் முதல் அடியையும், நச்சினார்க்கினியர், 'பகர இறுதி' என்னும் தொடரையும் உத்திக்குரியனவாகச் சுட்டுகின்றனர்.

**சொல்.42**

**ஒருபொருள் குறித்த வேறுபெயர்க் கிளவி**
**தொழில்வேறு கிளப்பின் ஒன்றிடன் இலவே**

என்னும் நூற்பாவிற்கு உரிய உத்தியாக,

இளம்பூரணர், 'ஞாபங் கூறல்' என்பதையும்,

தெய்வச்சிலையார், 'மொழிந்த பொருளோடு ஒன்றவைத்தல்' என்பதையும் குறிப்பிடுகின்றனர். இளம்பூரணர், இறுதியடியையே இவ்வுத்திக்குச் சுட்டிக்காட்டுகிறார்.

**சொல்.72**

**இரண்டாகுவதே**
**ஐ யெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி...**

எனத் தொடங்கும் நூற்பாவிற்கு உரிய உத்தியாக,

பேராசிரியர், 'தான் குறியிடுதல்' 'தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல்' என்பனவற்றையும்,

நச்சினார்க்கினியர், 'தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல்' என்பதையும் கூறுகின்றனர். இவர்களில் பேராசிரியர், மேற்குறித்த முதல் இரண்டு அடிகளைத் 'தான் குறியிடுதல்' என்பதற்கும், இடையில் அமைந்த ''காப்பின் ஒப்பின் ஊர்தியின் இழையின்'' என்னும் அடியைத் 'தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல்' என்பதற்கும் காட்டியுள்ளார்

**சொல்.133**

**முறைப்பெயர்க் கிளவி யேயொடு வருமே**

என்னும் நூற்பாவிற்கு உரிய உத்தியாக,

இளம்பூரணர், 'இறந்தது காத்தல்' என்பதையும்,

பேராசிரியர், 'பொருளிடையிடுதல்' என்பதையும்,

தெய்வச்சிலையார் 'வந்தது கொண்டு வாராதது முடித்தல்' என்பதையும் குறிப்பிடுகின்றனர்.

**சொல்.156**

**இடைச்சொற் கிளவியு முரிச்சொற் கிளவியு**
**மவற்று வழி மருங்கிற் றோன்று மென்ப"**

என்னும் நூற்பாவிற்கு உரிய உத்தியாக,

பேராசிரியர், 'வகுத்து மெய்ந்நிறுத்தல்' என்பதையும்,

நச்சினார்க்கினியர், கல்லாடனார், 'இறந்தது காத்தல்' என்பதையும் கூறுகின்றனர்.

**சொல்.223**

**செய்து செய்யூச் செய்பு செய்தெனச்**
**செய்யியர் செய்யிய செயின்செயச் செயற்கென**
**அவ்வகை யொன்பதும் வினையெஞ்சு கிளவி**

என்னும் நூற்பாவிற்கு உரிய உத்தியாக,

பேராசிரியர், 'தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல்', 'வாராததனான் வந்தது முடித்தல்' என்பனவற்றையும்,

நச்சினார்க்கினியர், 'தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல்' என்பதையும் குறிக்கின்றனர்.

இந்நூற்பா முழுவதையும் பேராசிரியர், நச்சினார்க்கினியர் இருவரும், 'தொகுத்த மொழியான் வகுத்தனர் கோடல்' உத்திக்கும், இறுதியடியை மட்டும் 'வாராததனான் வந்தது முடித்தல்' உத்திக்கும் சான்றுகாட்டுகின்றனர்.

**பொருள்.1**

**கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்**
**முற்படக் கிளந்த எழுதிணை என்ப**

என்னும் நூற்பாவிற்கு உரிய உத்தியாக,

இளம்பூரணர், 'தொகுத்துக் கூறல்' என்பதையும்,

பேராசிரியர், 'முறை பிறழாமை' என்பதையும் உரியது என்கின்றனர். பேராசிரியர் முதல் அடியை மட்டுமே குறிப்பிடுகிறார்.

**பொருள்.160**

**களவும் கற்பும் அலர்வரை வின்றே**

என்னும் நூற்பாவிற்கு உரிய உத்தியாக,

இளம்பூரணர், 'தொகுத்துக்கூறல்' என்பதையும்,

நச்சினார்க்கினியர், 'ஒப்பக் கூறல்' என்பதையும் காட்டுகின்றனர்.

**பொருள்.311**

**அவற்றுள்**
**மாத்திரை வகையும் எழுத்தியல் வகையும்**
**மேற்கிளந்தனவே யென்மனார் புலவர்.**

என்னும் நூற்பாவிற்கு உரிய உத்தியாக,

இளம்பூரணரும் பேராசிரியரும் 'கூறிற்றென்றல்' என்பதையும்

நச்சினார்க்கினியர், 'ஆணை கூறல்' என்பதையும் கூறுகின்றனர்.

**பொருள்.313**

**இருவகை உகரமோ டியைந்தவை வரினே**
**நேர்பு நிரைபும் ஆகும் என்ப**
**குறிலிணை உகரம் அல்வழி யான**

என்னும் நூற்பாவின் இறுதி அடியைப் பேராசிரியரும், நச்சினார்க்கினியரும் தனி நூற்பாவாகக் கொண்டனர்.

**குறிலிணை உகரம் அல்வழி யான**

என்னும் நூற்பாவிற்கு உரிய உத்தியாக,

பேராசிரியர், 'உடம்பொடு புணர்த்தல்', 'தந்து புணர்ந்துரைத்தல்' என்பனவற்றையும்,

நச்சினார்க்கினியர், 'உடம்பொடு புணர்த்தல்' என்பதையும் சுட்டிக்காட்டுகின்றனர்.

ஆனால் பேராசிரியர் மரபியல் உத்தி பற்றிய உரையில், அவர் தனி நூற்பாவாகக் கொண்ட, இவ்வடியைத் 'தந்து புணர்ந்துரைத்தல்' உத்திக்கு உரியது என்கிறார்.

## தொல்காப்பியர் கூறாத புதிய உத்திகள்

தொல்காப்பியர் 32 உத்திகளைக் குறிப்பிடுகிறார் என்பது முன்னர்க் கூறப்பட்டது. அம்முப்பத்திரண்டு உத்திகளின் பெயர்களிலேயே உரையாசிரியர்கள் வேறுபட்டனர். தொல்காப்பிய உரையாசிரியர்கள் தம் உரைகளில் அவர் கூறிய 32 உத்திகளில் சிலவற்றைக் குறிப்பிடுவதோடு அவர் கூறாத பல புதிய உத்திகளையும் சுட்டிச் செல்கின்றனர். அவற்றைக் காண்பதும் இந்நூலிற்குத் தேவையாகிறது. உரையாசிரியர்கள் வேறு பல உத்திகளைச் சுட்டும் நூற்பாக்கள் பலவாக இருப்பதால் அதிகாரத்தின் பெயரும் எண்களும் இங்குச் சுருக்கமாகக் கூறப்படுகின்றன.

### 1. அதிகாரம்

'அதிகாரம்' என்பது தொல்காப்பிய நூலின் பகுதிப் பிரிப்பிலேயே 'எழுத்ததிகாரம்', 'சொல்லதிகாரம்', 'பொருளதிகாரம்' எனப் பயின்றுவந்துள்ளது. இதனைத் தொல்காப்பியர் பயன்படுத்தியிருக்கமாட்டார் என அறிஞர்கள் கருதியமை முன்னர்க் கூறப்பட்டது. ஆனால், சு.ஜெயலட்சுமி, 'சேனாவரையர் இதனை ஓர் உத்தியாகக் கொண்டார். அதனைத் தொல்காப்பியனாரும் உத்தியாகக் கருதியிருப்பார்' எனத் தம் கருத்தை முன்வைக்கிறார்.

> *தொல்காப்பியச் சொல்லதிகாரத்தில் உள்ள ஒன்பது அதிகாரங்களும் பொருள் முறையில், அதிகாரம் என்னும் உத்தியைக் கையாளப்பட்டு வைக்கப்பட்டுள்ளன என்று சேனாவரையர் விளக்கத்துடன் கூறியுள்ளார்.*

என்பது சு.ஜெயலட்சுமி கூற்று. இதில் 'சொல்லதிகாரத்தில் உள்ள ஒன்பது அதிகாரங்கள்' என்பது, 'சொல்லதிகாரத்தில் உள்ள ஒன்பது இயல்கள்' என்னும் பொருளில் கூறப்பட்டதாகலாம். சேனாவரையர் மட்டுமில்லாமல் பிற உரையாசிரியர்களும் 'அதிகாரம்' என்னும் சொல்லைத் தம் உரையில் பல இடங்களில் பயன்படுத்துகின்றனர். அதனாலேயே அதை உத்தியாகக் கொள்ளமுடியுமா என்பது ஐயத்திற்குரிய ஒன்று.

இதேபோல் இவர், 'ஏற்புழிக் கோடல்', 'சூத்திரக் கிடக்கை', 'மறுதலைச் சிதைத்தல்', 'யோக விபாகம்', 'விரித்துக் கூறல்', 'வினா விடை அமைப்பு' ஆகியவற்றையும் சேனாவரையர் கூறும்

உத்திகளாகக் குறிப்பிடுகிறார்.[4] *தொல்காப்பியமோ*, அதன் உரையாசிரியர்களோ, பிற்கால இலக்கண நூல்களோ நேரடியாக உத்தி எனக் குறிப்பிடாத ஒன்றை உத்தியாகக் கொள்ள முடியுமா என்பது மேலும் ஆய்வுக்குரியது.

## 2. அருத்தாபத்தி

'அருத்தாபத்தி' என்பதும் உரையாசிரியர் பலரும் தம் உரையில் பயன்படுத்தியுள்ள ஒரு சொல்லாகும். இதனை நச்சினார்க்கினியர் ஓர் உத்தியாகக் கொண்டதாக அ. விசயலக்குமி குறிப்பிடுகிறார். இதற்கு,

> *'ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவிப் பன்மைக்காகும்' என்பதன் அருத்தா பத்தியால் பன்மைச் சுட்டிய பெயர் ஒருமைக்கும் வரும் எனக் கொள்க என்று கூறுவார்.*

என நச்சினார்க்கினியரைச் சான்றுகாட்டுகிறார். இதுபோல், 'உவமை அளவை', 'எதிர் பொருள் உணர்த்தல்', 'செப்பின் வகை', 'பருந்து விழுக்காடு', 'மதம்', 'விரித்துக் கூறல்' ஆகியவற்றையும் நச்சினார்க்கினியர் உத்தியாகக் கொண்டதாகத் தம் கட்டுரையில் இவர் குறிப்பிட்டுள்ளார்.[5]

இவற்றில் 'செப்பின் வகை' 'விடை வகை'யாக அமைவது. 'மதம்' என்பது, 'நூலாசிரியன் மேற்கொள்ளும் கொள்கை' என்னும் பொருள்படுவது. 'பருந்து விழுக்காடு' என்பது 'சூத்திர நிலையை'க் குறிப்பது. இவற்றை உத்திகளாக ஏற்க முடியுமா என்பது ஐயம். மேலும், இவற்றைப் பிற இலக்கண நூலாரும் உரையாசிரியரும் உத்தியாகக் குறிப்பிட்டிருந்தால் உத்தியாகத் துணிந்து ஏற்கலாம். அவ்வாறு குறிப்பிட்டிருப்பதாகத் தெரியவில்லை. இந்நிலையில் இதனை உத்தியாக ஏற்பது மேலும் ஆய்வுக்குரியது.

## 3. இரட்டுற மொழிதல்

இவ்வுத்திக்குரிய நூற்பாக்களாக,

| | |
|---|---|
| இளம்பூரணர், | தொல்.எழுத்து. 68, 125 |
| | பொருள். 99, 100, 656 |
| நச்சினார்க்கினியர், | தொல்.பொருள். 99, 100, 144, 149, 187 |
| கல்லாடனார், | தொல்.சொல். 42, 74, 75, 211 |

ஆகியவற்றைக் காட்டுகின்றனர்.

**4. உடம்படல்**

இவ்வுத்தியை உரையாசிரியர்கள் பொருளதிகாரத்தில் மட்டுமே மேற்கோள் காட்டுகின்றனர். இவ்வுத்திக்குரிய நூற்பாக்களாக,

| | |
|---|---|
| பேராசிரியர், | தொல். பொருள்.640, 645, 656. |
| நச்சினார்க்கினியர், | தொல்.பொருள்.463 |

ஆகியவற்றைச் சுட்டியுள்ளனர்.

**5. உய்த்துணர்தல் / உய்த்துணர வைத்தல்**

தொல்காப்பியரின் உய்த்துக்கொண்டுணர்த்தல் என்னும் இவ்வுத்திக்குரிய நூற்பாக்களாக,

| | |
|---|---|
| இளம்பூரணர், | தொல். பொருள். 27, 29, 41, 63, 366. |
| சேனாவரையர், | தொல்.சொல். 11, 18, 130, 219, 423. |
| பேராசிரியர், | தொல்.பொருள். 311, 363, 446, 452, 454, 554, 643, 653. |
| நச்சினார்க்கினியர், | தொல்.சொல். 245 |
| | பொருள்.14, 29, 31, 35, 36, 41, 50, 94, 126, 154, 170, 172, 175, 406, 434 |
| தெய்வச்சிலையார், | தொல்.சொல். 435 |
| கல்லாடனார், | தொல்.சொல். 99 |

ஆகியவற்றைக் குறிப்பிடுகின்றனர். உய்த்துணர வைத்தல் என்னும் பெயரில், இவ்வுத்திக்குரிய நூற்பாக்களாக,

| | |
|---|---|
| இளம்பூரணர், | தொல்.சொல். 45 |
| | பொருள். 1, 5 |
| சேனாவரையர், | தொல். சொல். 1, 219 |
| பேராசிரியர், | தொல். பொருள். 443 |
| தெய்வச்சிலையார், | தொல். சொல். 154, 226 |
| கல்லாடனார், | தொல். சொல். 24 |

என்பனவற்றைக் கூறுகின்றனர். சேனாவரையர், சொல்லதிகாரத்திற்குப் பெயர்க்காரணம் கூறுமிடத்து இவ்வுத்தியைக் குறிப்பிடுகிறார்.

## 6. எதிரது நோக்கல்

'எதிரது நோக்கல்' என்பதை உத்தியாகத் தெய்வச்சிலையார் குறிப்பிடுவதாக ந.முத்தரசு கூறியுள்ளார். இதற்குத் தெய்வச்சிலையார் சொல். 168 நூற்பா உரைப்பகுதியைச் சான்றுகாட்டுகிறார். அதில் ''இச்சூத்திரம் எதிரது நோக்கிற்று'' என்னும் தொடர் கூறப்பட்டுள்ளது. இத்தொடர் ஒன்றை மட்டும் கொண்டு எதிரது நோக்கலை ஓர் உத்தியாகக் கூறவியலாது. இந்நிலையில், 'ஏற்புழிக் கோடல்', 'சுருங்கக் கூறல்' என்பனவற்றையும் தெய்வச்சிலையார் குறிப்பிடும் உத்திகளாக இவர் பட்டியலிட்டுள்ளார்.[6]

'சுருங்கக் கூறல்' என்பது நூலின் பத்து அழகுகளில் ஒன்றாகக் குறிக்கப்பெறுவது. முன்னோர் உத்தியாகக் குறிப்பிடாதவற்றை அல்லது வேறு பகுதிக்குரியதாகக் குறிப்பிடுவனவற்றை உத்தியாகக் கூறுவது பொருத்தமன்று.

## 7. எய்தாதது எய்துவித்தல்

'எய்தாதது எய்துவித்தல்' என்பதை உத்தியாகத் *தொல்காப்பிய* உரையாசிரியர்களோ, பிற்கால இலக்கண நூல்களோ குறிப்பிட வில்லை. இந்நிலையில், பீ.நசீம்தீன், இதனைத் *தொல்காப்பியத்தில்* இளம்பூரணர் கையாண்டிருப்பதாகக் குறிப்பிடுகிறார்.

> *சொல்லப்படாத பொருளும் உரையில் அமையுமாறு நிறுத்தலாகும். விளி: 12, 28 உரையிற் காட்டுகிறார்.*

எனக் குறிப்பிட்டுள்ளார். இதேபோல் இவர், தம் கட்டுரையில், 'எய்தியது ஒருமருங்கு மறுத்தல்', 'ஐயம் மறுத்தல்', 'ஏது', 'பிரிது வந்தடைதல்', 'ஒழிபு கட்டுரை எடுத்தல்', 'ஒழிபு உணர்த்துதல்', 'குறி எய்துதல்' ஆகியவற்றையும் இளம்பூரணர் தம் உரையில் பயன்படுத்தியுள்ளதாகக் குறிப்பிடுகிறார்.[7]

இதே உத்தியைத் தம் கட்டுரையில் குறிப்பிடும் சி. பிலோமினாள், அதனோடு, 'எய்தியது ஒருமருங்கு மறுத்தல்', 'எய்தியது விலக்கல்', 'ஏற்புழிக் கோடல்', ஆகிய உத்திகளையும் கல்லாடனார் தம் உரையில் பயன்படுத்தியுள்ளார் எனக் குறிப்பிடுகிறார்.[8] ஆனால் முன்னோர் யாரும் தம் நூலிலோ, உரையிலோ உத்திகள் எனப் பெயரிட்டுக் குறிப்பிடாதனவற்றை ஏற்கலாமா என்பது மேலும் ஆய்வுக்குரியது.

**8. ஒப்பின் முடித்தல்**

தெய்வச்சிலையார் ஒருவரே தொல். சொல்.133, 144 ஆகிய இரு நூற்பா உரைகளில் இவ்வுத்தியைச் சுட்டிக்காட்டுகிறார்.

**9. ஒன்றின முடித்தல்**

இவ்வுத்திக்குரிய நூற்பாக்களாக,

இளம்பூரணர், தொல்.எழுத்து. 77, 134, 139, 357

கல்லாடனார், தொல்.சொல். 18, 79, 93, 100

பெயர்தெரியாஒருவர், தொல். சொல். 49

ஆகியவற்றைக் குறிப்பிடுகின்றனர்.

**10. ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல்**

இவ்வுத்தியைப் பேராசிரியர் மட்டுமே தொல்.பொருள்.313 என்னும் நூற்பாவிற்கு உரியதாக எடுத்துக்காட்டுகிறார்.

**11. கூறுவாம்**

'கூறுவாம்' என்பதனை எந்த இலக்கண நூலும் உத்தியாகக் குறிப்பிடவில்லை. ஆனால் சேனாவரையர் தொல்.சொல். 116 ஆம் நூற்பா உரையில் "கூறுவாம் என்னும் தந்திர உத்தி" எனக் குறிப்பிடுகிறார்.

**12. சொல்லின் முடிவின்அப்பொருள் முடித்தல்**

சேனாவரையர் ஒருவரே (தொல்.சொல்.393) என்னும் நூற்பா உரையில் இவ்வுத்தியை எடுத்தியம்புகிறார்.

**13. சொற்பொருள் விரித்தல்**

இளம்பூரணர் மட்டும், தொல்.பொருள்.656 ஆம் நூற்பாவான உத்திகள் பற்றிய நூற்பாவை விளக்குமிடத்து இதனைக் குறிப்பிடுகிறார்.

**14. தந்து கொணர்ந்துரைத்தல்**

தெய்வச்சிலையார் ஒருவரே (தொல். சொல். 50) என்னும் நூற்பா உரையில் இவ்வுத்தியைச் சுட்டிக்காட்டுகிறார்.

**15. தன்னின முடித்தல்**

இவ்வுத்திக்குரிய நூற்பாக்களாக,

இளம்பூரணர், தொல். எழுத்து. 17, 32,50,111,158,211

| | |
|---|---|
| சேனாவரையர், | தொல்.சொல். 16, 27, 38, 40, 62, 67, 210, 216, 413, 430, 444 |
| நச்சினார்க்கினியர், | தொல். எழுத்து. 31, 50, 52, 158, 329<br>சொல். 16, 36, 38, 45, 57, 62, 67, 137, 210, 245, 430, 447<br>பொருள். 356,369. |
| கல்லாடனார், | தொல்.சொல். 38,45,216,217,229,245 |

பெயர்தெரியா ஒருவர், தொல்.சொல். 36, 62

ஆகியவற்றைச் சுட்டிச் செல்கின்றனர்.

**16. பகுத்துணர்த்துதல்**

இதனைச் *சுவாமிநாதம்,*'பகுத்துணர்த்தல்' (10) எனக் குறிப்பிடுகிறது. இதனைப் 'பகுத்துணர்த்துதல்' என இளம்பூரணர் குறிப்பிடுகிறார்.

இளம்பூரணர், தொல். சொல். 392, 393, 394 ஆகிய நூற்பாக்களை இவ்வுத்திக்குரியனவாகக் கூறுகிறார்.

**17. பிறநூன் முடிந்தது தானுடம்படுதல்**

இவ்வுத்திக்குரிய நூற்பாக்களாக,

| | |
|---|---|
| இளம்பூரணர், | தொல். பொருள். 484 |
| சேனாவரையர், | தொல். சொல். 26, 456 |
| பேராசிரியர், | தொல். பொருள். 448 |

ஆகியவற்றைக் குறிப்பிடுகின்றனர்.

**18. மாட்டு / மாட்டெறிதல் / மாட்டேறு**

தொல்காப்பியர் செய்யுள் உறுப்புகளைக் கூறும் நூற்பாவில்,

மாட்டே வண்ணமோ டியாப்பியல் வகையின்

(தொ.பொ.310: 9)

என மாட்டு என்பதனைச் செய்யுள் உறுப்புகளுள் ஒன்றாகக் கூறுகிறார்.

பின்வந்த இலக்கண நூலான *நன்னூல்*(15) இவ்வுறுப்பை "மாட்டெறிந் தொழிதல், மாட்டெறிந் தொழுகல்" என்றும் *நவநீதப் பாட்டியல்* (72), *யாப்பருங்கலம்* (95) ஆகியவற்றின் உரைகள்

"மாட்டெறிந்தொழிதல்" என்றும் கூறுகின்றன. 'மாட்டெறிந் தொழிதல்' என்பதனை 25ஆம் உத்தியாகவும், 'மாட்டுறுப்பு' என்பதனை 29ஆம் உத்தியாகவும் *மாறனலங்காரம்* (25) கூறுகிறது.

*தொல்காப்பிய* உரையாசிரியர்களும் தமது உரைகளில் மாட்டு, மாட்டெறிதல், மாட்டேறு என்பனவற்றைச் சுட்டுகின்றனர்.

**மாட்டு**

இதற்குரிய நூற்பாக்களாக,

| | |
|---|---|
| பேராசிரியர், | தொல்.பொருள். 313, 522, 656 |
| நச்சினார்க்கினியர், | தொல்.எழுத்து. 112 |
| | சொல். 403, 310, |
| | பொருள். 511 |
| கல்லாடனார், | தொல். சொல். 213 |

ஆகியவற்றைக் குறிப்பிடுகின்றனர்.

**மாட்டெறிதல்**

இதற்குரிய நூற்பாக்களாக,

| | |
|---|---|
| இளம்பூரணர், | தொல். எழுத்து. 304, 323, 378 |
| | சொல். 34,139 |
| சேனாவரையர், | தொல்.சொல். 86, 117, 213 |
| பேராசிரியர், | தொல். பொருள். 322,326,416, 561, 656 |
| நச்சினார்க்கினியர், | தொல்.எழுத்து.1, 167,304, 323, 325, 341, 353, 363, 374, 377 |
| | சொல். 34, 123, 213 |
| | பொருள். 311, 457 |
| தெய்வச்சிலையார், | தொல். சொல். 211 |
| கல்லாடனார், | தொல். சொல். 123, 134 |

ஆகியவற்றையும் சுட்டுகின்றனர்.

**மாட்டேறு**

இதற்குரிய நூற்பாக்களாக,

| | |
|---|---|
| இளம்பூரணர், | தொல். எழுத்து.106, 169, 232, 271, 320, 323, 445, 447, 448, 451, 460, 461, 466, 469, 471, 478 |

| | |
|---|---|
| | சொல். 130, 146 |
| | பொருள். 1, 59, 89, 326, 511 |
| சேனாவரையர், | தொல். சொல். 117, 151, 213 |
| பேராசிரியர், | தொல். பொருள். 311, 331, 377, 416, 644, 654 |
| நச்சினார்க்கினியர், | தொல்.எழுத்து. 16, 33, 106, 224, 271, 299, 323, 363, 447, 448, 451, 455, 460, 461, 471, 478 |
| | சொல்.123, 213, 422 |
| | பொருள். 416 |
| தெய்வச்சிலையார், | தொல்.சொல். 254. |
| கல்லாடனார், | தொல்.சொல். 34, 123, 216 |

ஆகியவற்றையும் குறிப்பிடுகின்றனர்.

பேராசிரியர், நச்சினார்க்கினியர், கல்லாடனார் ஆகியோர் மாட்டு, மாட்டெறிதல், மாட்டேறு ஆகிய மூன்று பெயர்களையும் தம் உரைகளில் குறிப்பிடுகின்றனர்.

**19. முடித்துக்காட்டல்**

இவ்வுத்தியை நச்சினார்க்கினியர் தொல்.எழுத்து. 7ஆம் நூற்பா உரையில் சுட்டிக் காட்டுகிறார்.

**20. வகுத்துக்காட்டல்**

இவ்வுத்திக்குரிய நூற்பாக்களாக,

| | |
|---|---|
| பேராசிரியர், | தொல்.பொருள். 656 |
| தெய்வச்சிலையார், | தொல்.சொல். 456 |

ஆகியவற்றை மொழிகின்றனர்.

**21. வகுத்துரைத்தல்**

இவ்வுத்திக்குரிய நூற்பாக்களாக,

| | |
|---|---|
| தெய்வச்சிலையார், | தொல்.சொல். 125 |
| நச்சினார்க்கினியர், | பொருள். 347 |

என்பனவற்றைக் கூறுகின்றனர்.

**தொகுப்புரை**

இதுவரை கண்டவைகளிலிருந்து

1. *தொல்காப்பியத்தில்* கூறப்பட்டுள்ள அனைத்து உத்திகளையும் உரையாசிரியர்கள் அனைவரும் தம் உரையில் சுட்டிக்காட்டவில்லை. ஒரு சில உத்திகளை ஓரிருவரே சுட்டிக் காட்டியுள்ளனர்.

2. பின்வந்த உரையாசிரியர்களான நச்சினார்க்கினியர், கல்லாடனார், பெயர் தெரியா ஒருவர் போன்றோர் தமக்கு முன்பிருந்த உரைகளைக் கற்று அவற்றை உடன்பட்டும் மறுத்தும் உரைகண்டுள்ளனர்.

3. சில உத்திகளையே பன்முறை தங்கள் உரையில் சுட்டிக் காட்டும் போக்கையும் உரையாசிரியர்களிடம் காணமுடிகிறது.

4. உத்தி வரையறைக்கான அடிப்படைக் கருத்து மாறாதவரை, அவ்வுத்தியில் அமைந்த *தொல்காப்பிய* நூற்பாவும் மாற வழியில்லை. ஆனால் மிக அரிதாகவே உரையாசிரியர்கள் ஒரே நூற்பாவிற்கு ஒரே உத்தியைக் காட்டுகின்றனர். இதனால் நூற்பாவைப் பற்றிய அவர்களின் பார்வை அல்லது பொருள்கொள்ளும் முறை மாறியுள்ளதை அறியமுடிகிறது.

5. ஒரே நூற்பாவிற்கு உரியதாக ஓர் உரையாசிரியர் ஓர் உத்தியையும் மற்றோர் உரையாசிரியர் வேறோர் உத்தியையும் கூறுவது மேற்கண்ட கருத்தை மேலும் உறுதிப்படுத்துகிறது.

6. ஒரு நூற்பாவுக்கு உரையாசிரியர் ஒருவரே வெவ்வேறு உத்திகளைக் காட்டும் போக்கையும் காணமுடிகிறது. சில சமயங்களில் நூற்பா முழுமைக்கும் ஓர் உத்தியையும் அதன் பகுதிக்கு வேறோர் உத்தியையும் காட்டுகின்றனர்.

7. 32 உத்திகளைப் பட்டியலிட்ட தொல்காப்பியர் அவற்றை அடிப்படையாகக் கொண்டுதான் தம் நூலையும் எழுதியிருப்பார். ஆனால் உரையாசிரியர்கள் அவர் கூறிய பட்டியலில் இல்லாத பல புதிய உத்திகளைத் தங்கள் உரைகளில் காட்டுகின்றனர்.

8. *தொல்காப்பியத்திலோ* பிறநூல்களிலோ இல்லாத ஓர் உத்தியைத் தாமே படைத்துக் கூறும் போக்கும் உரையாசிரிகளிடம் காணப்படுகிறது.

9. இக்கால அறிஞர்கள், உரையாசிரியர்கள் தொல்காப்பியர் கூறும் உத்திகளேயன்றித் தம் உரைகளில் பலவிடத்தும் பயன்படுத்துகிற சில தொடர்களை உத்திகளாகக் குறிப்பிடுகின்றனர் என்பதை அறியமுடிகிறது.

குறிப்புகள்

1. சி.பிலோமினாள், ''தொல்காப்பிய உரையாசிரியர்களின் தருக்க நெறி உரை விளக்கம்– சொல்லதிகாரம்– கல்லாடனாரது உரை'', இ.ப.த.ம., 1977, ப. 245.

2. **தொகுத்தல்**

இளம்பூரணர், எ.104, சொ. 78, 79, 205, 214, 220, 646.

சேனாவரையர், சொ. 22, 100, 205, 409.

பேராசிரியர், பொ. 310, 350, 357, 397, 404, 405, 406, 458, 468, 469, 472, 476, 502, 504, 641, 653, 654

நச்சினார்க்கினியர், எ. 158, சொ. 178–180, 205, 214, பொ. 59, 69, 74, 98, 105, 112, 144, 145, 191, 310, 413, 468, 487, 491, 504

தெய்வச்சிலையார், சொ. 79, 205, 214.

கல்லாடனார், சொ. 10, 178–180, 205, 214, 216.

**தொகுத்துணர்த்துதல்**

இளம்பூரணர், எ. 1, சொ. 205, 274, 424, பொ. 112, 144, 145, 148, 234, 310, 432, 465, 485, 489, 535.

சேனாவரையர், எச்சவியல் பெயர்க்காரணம்.

நச்சினார்க்கினியர், எ.1, 158, சொ. 223, எச்சவியல்.

பெயர்க்காரணம், பொ. 1.

சிவஞான முனிவர் எ.1.

**தொகுத்துக் கூறுதல்**

இளம்பூரணர், பொ. 56, 504.

நச்சினார்க்கினியர், பொ. 149.

**தொகுத்துக் காட்டல்**

பேராசிரியர், பொ. 644, 656.

3. கி. நாச்சிமுத்து, ''உரையாசிரியர்களின் தருக்க நெறி உரைவிளக்கமும் பழங்கால நூலமைப்பு முறைகளும்'', இ.ப.த.ம., 1977, ப. 218.

4. சு. ஜெயலட்சுமி, ''தொல்காப்பிய உரையாசிரியர்களின் தருக்க நெறி உரை விளக்கம்–சொல்லதிகாரம்–சேனாவரையர் உரை'', இ.ப.த.ம., 1977, பக். 352–356.

5. ஆ. விசயலக்குமி, ''தொல்காப்பிய உரையாசிரியர்களின் தருக்க நெறி உரை விளக்கம்– தொல்– சொல்லதிகாரம்–நச்சினார்க்கினியர் உரை'', இ.ப.த.ம., 1977, பக். 323–328.

6. ந. முத்தரசு, ''தொல்காப்பிய உரையாசிரியர்களின் தருக்க நெறி உரைவிளக்கம்– சொல்லதிகாரம்– தெய்வச் சிலையாரின் சொல்லதிகார உரை'', இ.ப.த.ம., 1977, பக்.277–282.

7. பீ. நசீம்தீன், ''தொல்காப்பிய உரையாசிரியர்களின் தருக்க இயற் புலமை; சொல்லதிகாரம்– இளம்பூரணம்'', இ.ப.த.ம., 1977, பக்.189–194.

8. சி.பிலோமினாள், மு.நூ., பக். 244–248.

## முடிவுரை

இலக்கியம் அல்லது இலக்கணம் போன்ற நூல்களில் பொருள் உணர்முறை உத்தி எனப்பட்டது. இக்காலத்தில் இதனைத் தொழில் நுட்பம் என்னும் சொல் குறிக்கிறது.

உத்தி பற்றிய கருத்தாக்கம் அல்லது சிந்தனையின் தொடக்கத்தைத் *தொல்காப்பியத்திலேயே* காணமுடிகிறது. இந்நூல் தன் இறுதி நூற்பாவில் 32 உத்திகளைக் குறிப்பிடுகிறது.

32 உத்திகளைக் குறிப்பிடும் நூற்பாவையும் அதனோடு இறுதியில் அமைந்த வேறுசில நூற்பாக்களையும் இடைச்செருகலாகச் சிலர் கருதுகின்றனர். ஆனால் இந்நூல் அதனைத் *தொல்காப்பிய* உத்தியாகவே கருதுகிறது.

*தொல்காப்பியத்தின்* காலத்தை முடிவு செய்வதற்குரிய காரணங்களில் ஒன்றாகத் *தொல்காப்பியம்* குறிப்பிடும் உத்தி சுட்டப்படுகின்றது.

*தொல்காப்பியம்* குறிப்பிடும் 32 உத்திகள், வடமொழி நூல்களின் 32 உத்திகளைப் பார்த்து எழுதப்பட்டவை எனவும் கருதப்படுகிறது. இக்கருத்து ஏற்புடையதாகாது என்பதைச் சான்றுகள் காட்டுகின்றன. உத்திக் கோட்பாடு *தொல்காப்பியத்திலிருந்தே* வடமொழிக்குச் சென்றன என்பதற்கான சான்றுகளும் உள்ளன.

வடமொழியில் *அர்த்த சாத்திரம், சரக சம்கிதை, சுசுருத சம்கிதைகளில்* உத்திகளின் பட்டியல் காணப்படுகிறது.

*அர்த்த சாத்திரத்திலும் சம்கிதைகளிலும்* உள்ள உத்திகளுக்கும் *தொல்காப்பிய* உத்திகளுக்கும் ஓரளவே ஒற்றுமை உள்ளது. இவ்விருவேறு மொழிகளில் அமைந்த நூல்களில் உள்ள உத்திகளின் நோக்கமும் பயனும் மாறுபட்டுள்ளன. வடமொழியில் உத்தி வாதிடும் கலைக்காக உருவாக்கப்பட்டுள்ளது. தமிழில் நூலின் பொருள் புலப்பாட்டிற்காக உருவாக்கப்பட்டுள்ளது.

உத்தி என்னும் சொல் தமிழுக்கு உரியது எனவும் தமிழுக்குரியது அன்று எனவும் இருவேறு கருத்துப் போக்குகள் காணப்படினும் சான்றுகள் அடிப்படையில் உத்தி தமிழ்ச் சொல் என்பது இந்நூலில் ஏற்கப்படுகிறது.

இக்கருத்துகளின் அடிப்படையில் *தொல்காப்பியத்தில்* உள்ள உத்திகள் தமிழர் சிந்தனையில் தோன்றியவை எனக் கருதப்படுகிறது.

காலந்தோறும் சொற்கள் பொருள் வளர்ச்சி பெறுவது இயல்பு. உத்தி என்னும் சொல்லும் பல்வேறு பொருள்களைக் கொண்டதாக வழங்கிவந்தமையை இலக்கியங்களும் நிகண்டுகளும் அகராதிகளும் காட்டுகின்றன. 14 தலைச் சொற்களாகப் பிரித்து 28 பொருள்களுக்கு உரியதாக அதன் கருத்து விரிவாக்கம் அமைந்துள்ளது. ஆயினும், இவற்றில் ஒரு சிலவே *தொல்காப்பிய* உத்திக்குரிய பொருளோடு பொருந்துகின்றன.

உத்தியின் பயன்பாடு தமிழ் இலக்கண இலக்கியங்களில் மட்டுமன்றி, பிற துறைகளிலும் காணப்படுகிறது.

*தொல்காப்பியத்திற்குப்* பழைய உரையாசிரியர்களாக எழுவர் காணப்படினும் 32 உத்திகள் இடம்பெற்றுள்ள மரபியலுக்கு இளம்பூரணர், பேராசிரியர் ஆகியோர் இருவரின் உரைகள் மட்டுமே கிடைக்கின்றன. பிற்கால ஆய்வறிஞர்கள் சிலரும் உத்திகளைப் பற்றிக் கருத்துகளைத் தெரிவித்துள்ளனர்.

பழைய உரையாசிரியர்களான இளம்பூரணர், பேராசிரியர் இருவரும் 32 உத்திகளின் வரிசை முறை வைப்பிலும், பெயர்களை முடிவு செய்வதிலும், வரையறை செய்வதிலும் ஒத்த கருத்துடையவர்களாக இல்லை.

இவர்கள் காட்டும் வேறுபாடுகள் எழுத்து நிலையிலும் சொல் நிலையிலும் தொடர் நிலையிலும் பொருள் நிலையிலும் காணப்படுகின்றன.

உத்திகளைத் தம் உரைகளில் பழைய உரையாசிரியர்கள் எழுவரும் சுட்டிக்காட்டி உள்ளனர். ஆனால், தொல்காப்பியர் குறிப்பிட்ட 32 உத்திகளை மட்டுமே *தொல்காப்பிய* நூலில் பொருத்திக் காட்டவேண்டும் என உரையாசிரியர்கள் கருதவில்லை. பிற்கால இலக்கண நூல்களில் காணப்படும் உத்திகளையும் *தொல்காப்பிய* நூற்பாக்களின் உரையில் இவர்கள் குறித்துச் செல்கின்றனர்.

உரையாசிரியர்கள் சிலர் *தொல்காப்பியர்* குறிப்பிட்ட உத்திகளில் ஒருசிலவற்றையே தம் உரைகளில் பல முறை சுட்டிக்காட்டுகின்றனர். சிலவற்றை மிக அரிதாகவே காட்டுகின்றனர்.

ஒருசில உத்திகளை ஒருவர் அல்லது இருவர் மட்டுமே தம் உரைகளில் குறிப்பிடுகின்றனர்.

உத்தி வரையறையில் அடிப்படையான கருத்து மாற்றம் இல்லாதவரை, அவ்வுத்தியில் அமைந்த *தொல்காப்பிய* நூற்பாவும் மாற வழியில்லை. ஆனால் மிக அரிதாகவே வெவ்வேறு உரையாசிரியர்கள் ஒரே நூற்பாவிற்கு ஒரே உத்தியைக் காட்டுகின்றனர். இதனால் நூற்பாவைப் பற்றிய அவர்கள் பார்வை அல்லது பொருள்கொள்ளும் முறை மாறியுள்ளதை அறியமுடிகிறது. அதன் விளைவாக ஒரு நூற்பாவிற்கு உரியதாக ஓர் உரையாசிரியர் ஓர் உத்தியையும் மற்றோர் உரையாசிரியர் வேறோர் உத்தியையும் கூறும் நிலை ஏற்பட்டது.

ஒரு நூற்பாவுக்கு உரையாசிரியர் ஒருவரே வெவ்வேறு உத்திகளைக் காட்டும் போக்கையும் காணமுடிகிறது.

சில சமயங்களில் நூற்பா முழுமைக்குமோ அல்லது ஒரு பகுதிக்கு மட்டுமோ உரையாசிரியர்கள் உத்தியைச் சுட்டிக் காட்டுகின்றனர்.

ஒரே நூற்பாவின் முழுப் பகுதிக்கும் ஓர் உத்தியையும் அதே நூற்பாவின் ஒரு பகுதிக்கு மற்றோர் உத்தியையும் உரையாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர்.

தாமே புதியதோர் உத்தியைப் படைத்து மொழியும் போக்கையும் உரையாசிரியர்களிடம் காணமுடிகிறது.

*தொல்காப்பியத்திற்கும்* அதன்உரையாசிரியர்களுக்கும் இடையே சுமார் 1500 ஆண்டுக்கால இடைவெளி உள்ளது. இந்நிலையில் தொல்காப்பியர் கூறிய கருத்தை விளங்கிக் கொள்வது அரிய செயலாகியது. காலப் பழைமை வாய்ந்த நூலில் ஏற்பட்ட இடைச்செருகல்கள் கருத்துப் புலப்பாட்டைச் சிக்கலாக்கியுள்ளன. இடைச்செருகலையே *தொல்காப்பியத்தின்* உண்மைப் பகுதி என உரையாசிரியர்கள் கருதியதையும் காணமுடிகிறது. மேலும், உரையாசிரியர்களின் கோட்பாடுகள், சிந்தனைப் போக்குகள், காலச்சூழல் போன்றனவும் உத்திகள் பற்றிய கருத்தில் உரையாசிரியர்களுக்கிடையே வேறுபாடுகள் தோன்றக் காரணங்களாக அமைகின்றன.

*தொல்காப்பிய* காலத்திற்கும் அதன் உரைகளின் காலத்திற்கும் இடையில் பல இலக்கண நூல்கள் தோன்றின. அவற்றின் பாதிப்பும் உரையாசிரியர்களிடம் காணப்படுகிறது. இவற்றால் அவர்களின் உத்திகளைப் பற்றிய கண்ணோட்டம், பொருள் கொள்ளும் நிலை ஆகியவற்றில் மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன.

பின்வந்த உரையாசிரியர்கள், தமக்கு முந்தைய உரையாசிரியர்களின் உரைகளைப் படித்து, அவற்றிற்கு மாற்றுக் கருத்து உளதாயின், அதனைக் கூறும் வாய்ப்பினைப் பெற்றுள்ளனர். அந்த அடிப்படையிலும், உத்திகள் பற்றிய மாற்றுக் கருத்துகள் உருவாகியுள்ளன.

இக்கால அறிஞர்கள், உரையாசிரியர்கள் தம் உரைகளில் பலவிடத்தும் நூற்பா விளக்கத்திற்காகக் கூறப்படும் தொடர்களை உத்திகளாகக் குறிப்பிடுகின்றனர்.

இந்நூல் *தொல்காப்பிய* உத்திகளைப் பற்றியும் அவற்றோடு தொடர்புடைய செய்திகளைப் பற்றியும் மட்டுமே ஆராய்ந்துள்ளது. பிற்கால இலக்கணங்கள் கூறும் உத்திகளையும், அந்நூல்களின் உரையாசிரியர் கருத்துகளையும் ஆராய்வதற்கான வாய்ப்புகள் நிரம்ப உள்ளன.

இலக்கிய உரைகளிலும் உத்திகளைப் பற்றிய செய்திகள் ஆங்காங்கே காணப்படுகின்றன. இவற்றையெல்லாம் விரிவாக ஆராய வேண்டிய தேவையுள்ளது. உத்திகளைப் பற்றிய அத்தகைய ஆய்வுகளுக்கான வாய்ப்புகளைச் சுட்டிக்காட்டுவதாகவும், அவற்றின் முன் பகுதியாகவும் இந்நூல் அமைகிறது.

## துணை நூல்கள்


முதன்மைத் தரவுகள்

**தொல்காப்பிய மூலமும் உரையும் – எழுத்ததிகாரம்**

1. **தொல்காப்பியம் – எழுத்ததிகாரம்**, இளம்பூரணர் (உரை), திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, மறுபதிப்பு, 1977.
2. **தொல்காப்பியம் – எழுத்ததிகாரம்**, நச்சினார்க்கினியர் உரை, திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, ஆறாவது பதிப்பு, 1972.

**சொல்லதிகாரம்**

3. **தொல்காப்பியம்– சொல்லதிகாரம்**, இளம்பூரணர் உரை, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1973.
4. **தொல்காப்பியம்– சொல்லதிகாரம்**, கல்லாடனார் விருத்தி, தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் (ப.ஆ.), ர.ந. ஸம்பத்(பொ.ப.ஆ.), தமிழ்நாடு அரசு, 1971.
5. **தொல்காப்பியம்–சொல்லதிகாரம்**, சேனாவரையருரை, கந்தசாமி(கு.ரை), ஞ.தேவநேயப் பாவாணர், (கு.ரை), திருநெல்வேலி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, மறுபதிப்பு, 1974.

6. தொல்காப்பியம், சொல்லதிகாரம், சேனாவரையம், கு. சுந்தரமூர்த்தி (ப.ஆ.), அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர், 1981.

7. தொல்காப்பியம், சொல்லதிகாரம், தெய்வச்சிலையார் உரை, நிழற்படப் பதிப்பு, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், பல்கலைக் கழக வெளியீட்டு எண். 5, 1984.

8. தொல்காப்பியம்–சொல்லதிகாரம், நச்சினார்க்கினியர் உரை, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, மறுபதிப்பு, 1974.

9. தொல்காப்பியம் – சொல்லதிகாரம், நச்சினார்க்கினியர் உரை, கோவிந்தசாமிப் பிள்ளை, இராம. (ப.ஆ.), தஞ்சைச் சரசுவதி மகால் வெளியீட்டு எண்.93, தஞ்சாவூர், 1962.

பொருளதிகாரம்

10. தொல்காப்பியம்–பொருளதிகாரம், இளம்பூரணர் உரை, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1969.

11. தொல்காப்பியம்–பொருளதிகாரம், பிற்பகுதி, (மெய்ப்பாட்டியல்–உவமவியல்–செய்யுளியல்–மரபியல்) பேராசிரியர் உரை, கு. சுந்தரமூர்த்தி (ப.ஆ.), அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர், 1985.

12. தொல்காப்பியம், பொருளதிகாரம்–அகத்திணையியல், புறத்திணையியல், நச்சினார்க்கினியர் உரை, திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை,1947.

13. தொல்காப்பியம்– பொருளதிகாரம், களவியல், கற்பியல், பொருளியல், நச்சினாரக்கினியர் உரை, திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை,1950.

14. தொல்காப்பியம்–பொருளதிகாரம்,செய்யுளியல், நச்சினார்க்கினியர் உரை, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1965

தொல்காப்பிய உரைவளம்

எழுத்ததிகாரம்

15. தொல்காப்பியம்,சிறப்புப்பாயிரம், (உரைவளம்), ஆ.சிவலிங்கனார் (ப.ஆ.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1980.

16. தொல்காப்பியம்–எழுத்ததிகாரம் (உரைவளம்) நூன்மரபு, ஆ. சிவலிங்கனார் (ப.ஆ.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1980.

17. தொல்காப்பியம்–எழுத்ததிகாரம்(உரைவளம்) மொழிமரபு. ஆ. சிவலிங்கனார் (ப.ஆ.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1981.

18. தொல்காப்பியம்– எழுத்ததிகாரம் (உரைவளம்), பிறப்பியல், ஆ. சிவலிங்கனார் (ப.ஆ.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1981.

19. தொல்காப்பியம்–எழுத்ததிகாரம் (உரைவளம்) புணரியல், ஆ. சிவலிங்கனார் (ப.ஆ.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1982.

20. தொல்காப்பியம்– எழுத்ததிகாரம் (உரைவளம்) தொகைமரபு, ஆ. சிவலிங்கனார் (ப.ஆ.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1982.

21. தொல்காப்பியம்– எழுத்ததிகாரம் (உரைவளம்) உருபியல், ஆ.சிவலிங்கனார் (ப.ஆ.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1982.

22. தொல்காப்பியம்– எழுத்ததிகாரம் (உரைவளம்), உயிர் மயங்கியல், ஆ. சிவலிங்கனார் (ப.ஆ.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,, சென்னை, 1982.

23. தொல்காப்பியம்–எழுத்ததிகாரம் (உரைவளம்) புள்ளிமயங்கியல், ஆ. சிவலிங்கனார் (ப.ஆ.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1983.

24. தொல்காப்பியம்–எழுத்ததிகாரம் (உரைவளம்), குற்றியலுகரப் புணரியல், ஆ. சிவலிஙங்கனார் (ப.ஆ.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1983.

சொல்லதிகாரம்

25. தொல்காப்பியம்–சொல்லதிகாரம்(உரைவளம்) கிளவியாக்கம், ஆ. சிவலிங்கனார் (ப.ஆ.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1982.

26. தொல்காப்பியம்–சொல்லதிகாரம்(உரைவளம்) வேற்றுமையியல், ஆ. சிவலிங்கனார், (ப.ஆ.). உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1983.

27. தொல்காப்பியம்–சொல்லதிகாரம்(உரைவளம்) வேற்றுமை மயங்கியல். ஆ. சிவலிங்கனார் (ப.ஆ.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1984.

28. தொல்காப்பியம்–சொல்லதிகாரம்(உரைவளம்) விளிமரபு. ஆ. சிவலிங்கனார் (ப.ஆ.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1984.

29. தொல்காப்பியம்–சொல்லதிகாரம்(உரைவளம்) பெயரியல். ஆ. சிவலிங்கனார் (ப.ஆ.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1984.

30. தொல்காப்பியம்–சொல்லதிகாரம்(உரைவளம்), வினையியல். ஆ. சிவலிங்கனார் (ப.ஆ.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1984.

31. தொல்காப்பியம்–சொல்லதிகாரம் (உரைவளம்) இடையியல். ஆ. சிவலிங்கனார் (ப.ஆ.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1986.

32. தொல்காப்பியம்–சொல்லதிகாரம் (உரைவளம்) உரியியல். ஆ. சிவலிங்கனார் (ப.ஆ.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1987.

33. தொல்காப்பியம்–சொல்லதிகாரம் (உரைவளம்), எச்சவியல். ஆ. சிவலிங்கனார் (ப.ஆ.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1988.

பொருளதிகாரம்

34. தொல்காப்பியம்–பொருளதிகாரம் (உரைவளம்) அகத்திணையியல், மு. அருணாசலம் பிள்ளை (ஆ.ரை.), முத்துச்சண்முகம் (ப.ஆ.), த.வே. வீராசாமி (ப.ஆ.), தமிழ்த்துறை, மதுரைப் பல்கலைக் கழகம், மதுரை, 1975.

35. தொல்காப்பியம் – பொருளதிகாரம் (உரைவளம்) அகத்திணையியல், ஆ. சிவலிங்கனார் (ப.ஆ.); உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1991.

36. தொல்காப்பியம் – பொருளதிகாரம் (உரைவளம்) புறத்திணையியல், பகுதி 1, 2., ஆ. சிவலிங்கனார் (ப.ஆ.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1996.

37. தொல்காப்பியம் – பொருளதிகாரம் (உரைவளம்) களவியல், ஆ. சிவலிங்கனார் (ப.ஆ.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1995.

38. தொல்காப்பியம் – பொருளதிகாரம் (உரைவளம்), ஆ. சிவலிங்கனார் (ப.ஆ.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1993.

39. தொல்காப்பியம்–பொருளதிகாரம் (உரைவளம்) பொருளியல், ஆ. சிவலிங்கனார் (ப.ஆ.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1994.

40. தொல்காப்பியம்–பொருளதிகாரம்(உரைவளம்) மெய்ப்பாட்டியல், ஆ. சிவலிங்கனார் (ப.ஆ.),உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1998.

41. தொல்காப்பியம்–பொருளதிகாரம் (உரைவளம்) உவமவியல், ஆ. சிவலிங்கனார் (ப.ஆ.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம். சென்னை, 1998.

42. தொல்காப்பியம்–பொருளதிகாரம் (உரைவளம்) செய்யுளியல் பகுதி–1, ஆ. சிவலிங்கனார் (ப.ஆ.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1997.

43. தொல்காப்பியம்–பொருளதிகாரம் (உரைவளம்) செய்யுளியல் பகுதி–2, 3, 4., ஆ. சிவலிங்கனார் (ப.ஆ.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1998.

44. தொல்காப்பியம்–பொருளதிகாரம் (உரைவளம்) மரபியல், கே. பகவதி (ப.ஆ.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1981.

45. தொல்காப்பியம்– பொருளதிகாரம் (உரைவளம்) புறத்திணையியல், க. வெள்ளைவாரணன் (ஆ.ரை.), பதிப்புத்துறை, மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை, 1983.

46. தொல்காப்பியம்–பொருளதிகாரம் (உரைவளம்) களவியல், க. வெள்ளைவாரணன் (ஆ.ரை.), பதிப்புத்துறை, மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை, 1983.

47. தொல்காப்பியம்–பொருளதிகாரம் (உரைவளம்) கற்பியல், க. வெள்ளைவாரணன் (ஆ.ரை.), பதிப்புத்துறை, மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை, 1983.

48. தொல்காப்பியம்–பொருளதிகாரம் (உரைவளம்) பொருளியல், க. வெள்ளைவாரணன் (ஆ.ரை.), பதிப்புத்துறை, மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை, 1983.

49. தொல்காப்பியம்–பொருளதிகாரம் (உரைவளம்) மெய்ப்பாட்டியல், க. வெள்ளைவாரணன் (ஆ.ரை.), பதிப்புத்துறை, மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை, 1986.

50. தொல்காப்பியம்–பொருளதிகாரம் (உரைவளம்) உவமையியல், க. வெள்ளைவாரணன் (ஆ.ரை.), பதிப்புத்துறை, மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை, 1985.

51. தொல்காப்பியம்–பொருளதிகாரம் (உரைவளம்) செய்யுளியில், க. வெள்ளைவாரணன் (ஆ.ரை.), பதிப்புத்துறை, மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை, 1989.

52. தொல்காப்பியம்–பொருளதிகாரம் (உரைவளம்) மரபியல், க. வெள்ளைவாரணன் (ஆ.ரை.), பதிப்புத்துறை, மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை, 1994.

## துணைத் தரவுகள்

### இலக்கண நூல்கள்

53. இலக்கண விளக்கம், பொருளதிகாரம் – பாட்டியல், தி. வே. கோபாலையர் (ப.ஆ.), திருவையாறு, சரஸ்வதி மகால் வெளியீடு–153, தஞ்சாவூர், 1974.

54. கலித்துறைப் பாட்டியல் என்னும் நவநீதப் பாட்டியல், எஸ். கல்யாணசுந்தரையர் (ப.ஆ.), எஸ்.ஜி. கணபதி ஐயர் (ப.ஆ.), உ.வே.சா.நூல் நிலையம், சென்னை, மூன்றாம் பதிப்பு, 1994.

55. களவியல் என்ற இறையனாரகப்பொருள், தெய்வப்புலமை நக்கீரர் அருளிய உரையுடன், திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம். சென்னை, மறுபதிப்பு, 1964.

56. குவலயானந்தம் 1, 2, சந்திராலோகம், ச.வே. சுப்பிரமணியன், தமிழ்ப் பதிப்பகம், 1, கால்வாய்க்கரைச் சாலை, கஸ்தூரிபாய் நகர், அடையாறு, சென்னை, 1979.

57. சுவாமிநாதம், செ.வை. சண்முகம் (ப.ஆ.), (உ.ஆ.), அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர், 1975.

58. சுவாமிநாதம் மூலமும் விருத்தியுரையும், செ.வை.சண்முகம் (ப.ஆ.), அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை, நகர், 1976.

59. நன்னூல் மூலமும் கூழங்கைத் தம்பிரான் உரையும், அ. தாமோதரன் (ப.ஆ.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1998.

60. நன்னூல் மூலமும் சங்கர நமச்சிவாயருரையும், உ.வே. சாமிநாதையர் (ப.ஆ.), உ.வே.சா. நூல்நிலையம், சென்னை, ஐந்தாம் பதிப்பு, 1991.

61. நன்னூல் மூலமும் மயிலைநாதருரையும், உ.வே. சாமிநாதையர் (ப.ஆ.), உ.வே.சா. நூல்நிலையம், சென்னை, மூன்றாம்பதிப்பு, 1995. (நூல்நிலைய முதல்பதிப்பு).

62. நன்னூல் விருத்தியுரை, சோம. இளவரசு (ப.ஆ.), அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர், முதற்பதிப்பு, 1981.

63. நன்னூற் காண்டிகையுரை, ஆறுமுக நாவலர் பதிப்பின் நிழற்படப்பதிப்பு, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1984.

64. மாறனலங்காரம் மூலமும் உரையும், செந்தமிழ்ப் பிரசுரம், தமிழ்ச் சங்க முத்திராசாலைப் பதிப்பு, மதுரை, 1915.

65. யாப்பருங்கலக்காரிகை அமிர்தசாகரர் இயற்றிய மூலமும் குணசாகரர் இயற்றிய உரையும், ந.மு. வேங்கடசாமி நாட்டார், திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 17ஆம் பதிப்பு, 1992.

66. யாப்பருங்கலம் (பழைய விருத்தி உரையுடன்), மே.வீ. வேணுகோபாலப் பிள்ளை (ப.ஆ.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, மறுபதிப்பு, 1998.

67. **வச்சணந்தி மாலை என்னும் வெண்பாப் பாட்டியலும் வரையறுத்த பாட்டியலும்**, கொ. இராமலிங்கத் தம்பிரான் (உ.ஆ.), கழக வெளியீடு, மறுபதிப்பு, 1976.

68. **வீரசோழியம்**, ச.வே. சுப்பிரமணியன், தமிழ்ப் பதிப்பகம், 1, கால்வாய்க் கரைச் சாலை, கஸ்தூரிபாய் நகர், அடையாறு, சென்னை, இரண்டாம் பதிப்பு, 1979.

**இலக்கிய நூல்கள்**

69. **அகநானூறு–நித்திலக்கோவை மூலமும் உரையும்**, வே. சிவசுப்பிரமணியன் (ப.ஆ.), உ.வே.சா. நூல்நிலையம், சென்னை, 1990.

70. **அகநானூறு–மணிமிடைப் பவளம், மூலமும் உரையும்**, வே. சிவசுப்பிரமணியன் (ப.ஆ.), உ.வே.சா. நூல்நிலையம், சென்னை, 1990.

71. **கலித்தொகை மூலமும் நச்சினார்க்கினியர் உரையும்**, இ.வை. அனந்தராமையர் (ப.ஆ.), பதிப்புத்துறை, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1984.

72. **சிலப்பதிகாரம் மூலமும் அரும்பத உரையும் அடியார்க்கு நல்லாருரையும்**, உ.வே. சாமிநாதையர் (ப.ஆ.), உ.வே.சா. நூல்நிலையம், சென்னை, ஒன்பதாம் பதிப்பு, 1978.

73. **பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியருரையும்**, உ.வே. சாமிநாதையர் (ப.ஆ.), தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1986.

74. **புறநானூறு மூலமும் உரையும்**, உ.வே. சாமிநாதையர் (ப.ஆ.), தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1985.

75. **மணிமேகலை**, உ.வே. சாமிநாதையர் (உ.ஆ.), உ.வே.சா.நூல் நிலையம், சென்னை, ஏழாம் பதிப்பு, 1981.

**நிகண்டுகளும் அகராதிகளும்**

76. **இலக்கியச் சொல்லகராதி**, சுன்னாகம், அ. குமாரசுவாமிப் பிள்ளை, சென்னப்பட்டணம், வித்தியாநுபாலன யந்திரசாலையில் அச்சிற் பதிப்பிக்கப்பட்டது.

77. **சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம், தொகுதி–1 (அ–ஔ)**, இரா. சாரங்கபாணி(மு.ப.ஆ.),தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1986.

78. **செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி முதன் மடலம்– மூன்றாம் பாகம்**. வை. பழனிச்சாமி (மு.ப.ஆ.), செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக வெளியீடு, சென்னை, 1997.

79. சேந்தன் திவாகரம், மு. சண்முகம்பிள்ளை (ப.ஆ.), முதல் தொகுதி, இ. சுந்தரமூர்த்தி (ப.ஆ.), சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை, 1990.

80. தமிழ்ச்சொல்லகராதி, c.w.கதிரைவேற் பிள்ளை உலகத் தமிழாராய்ச்சி முதலாம் பாகம், நிறுவனம், சென்னை, மறுபதிப்பு, 1998.

81. தொல்காப்பியச் சிறப்பகராதி, ப.வே. நாகராசன் (தொ.ஆ.), த.விஷ்ணுகுமாரன் (தொ.ஆ.), பன்னாட்டுத் திராவிட மொழியியல் நிறுவனம், திருவனந்தபுரம், 2000.

82. நாமதீப நிகண்டு, எஸ். வையாபுரிப்பிள்ளை (ப.ஆ.), தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், நிழற்படப் பதிப்பு, 1985.

83. பழந்தமிழ் நூற் பிரஞ்சு இந்தியக் கலைக்கழக வெளியீடு சொல்லடைவு (அ–ஔ), முதற் பகுதி. நெ.37, பிரஞ்சு இந்தியக் கலைக்கழகம், பாண்டிச்சேரி, 1967.

84. பிங்கலந்தை என்னும் பிங்கல நிகண்டு, திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, இரண்டாம் பதிப்பு, 1978.

85. பெருஞ்சொல்லகராதி– தொகுதி மூன்று. பழனி. அரங்கசாமி (மு.ப.ஆ.), தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீட்டு எண்:95–3, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1992.

86 மண்டல புருடர் சூடாமணி நிகண்டு ஒரு சொல் பலபொருள் விளக்கம் (பதினொன்றாம் தொகுதி) மு.சண்முகம்பிள்ளை (ப.ஆ.), இ. சுந்தரமூர்த்தி (ப.ஆ.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1998.

87. வடமலை நிகண்டு (உரையுடன்), வித்துவான் சு. பாலசாரநாதன், இரா. நாகசாமி (ப.ஆ.), உ.வே.சா. நூல் நிலையம், சென்னை, 1983.

88. வேதகிரியார் சூடாமணி நிகண்டு, மு. சண்முகம்பிள்ளை (ப.ஆ.), த. பூமிநாகநாதன் (ப.ஆ.), உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1997.

89. வாழ்வியற் களஞ்சியம்–உரிச்சொல் நிகண்டு, தொகுதி நான்கு இராசர்சு கார்ல், ந. பாலுசாமி (மு.ப.ஆ.), அ.மா. பரிமணம் (பொ.ஆ.), வீ. சேகர் (பொ.ஆ.), தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீட்டு எண்: 53–4, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1987.

90. **A Word Index For Cankam Literature**, Thomas Lehmann and Thomas Malten, Institute of Asian Studies Madras, India, First Indian Ediion , 1993.

91. **Tamil Lexicon**, Vol-1, University of Madras, Madras, Reprinted, 1982.

**ஆய்வு நூல்களும் கட்டுரைகளும்**

92. அரவிந்தன், மு.வை., *உரையாசிரியர்கள்,* மணிவாசகர் நூலகம், சிதம்பரம், கிளை; 241, இலிங்கிச் செட்டித்தெரு, சென்னை, திருத்திய இரண்டாம் பதிப்பு, 1977.

93. இலக்குவனார், சி., *தொல்காப்பிய ஆராய்ச்சி,* அபிராமி பதிப்பகம், 17, கொடிமரத்தெரு, இராயபுரம், சென்னை, 2000.

94. இளங்குமரன், இரா., *இலக்கண வரலாறு,* மணிவாசகர் பதிப்பகம், 55இ, லிங்கிச் செட்டித் தெரு, சென்னை, 1990.

95. கோதில் மொழியான், சின்., *தொல்காப்பியத்தில் சாதி நெறி,* வசந்த செல்வி பதிப்பகம், 74, வெளிப்பேட்டைத் தெரு, தர்மபுரி, 1988.

96. சண்முகம், செ.வை., ''தொல்காப்பியரின் சில இலக்கண உத்திகள்'' இ.ப.த.ம. *ஐந்தாவது கருத்தரங்க ஆய்வுக்கோவை,* சென்னை, 1973, பக்.541–547.

97. சுப்பிரமணிய பிள்ளை, கா., *இலக்கிய வரலாறு,* முதற்பாகம், ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம், பவழக்காரத் தெரு, சென்னை, நான்காம் பதிப்பு, 1953.

98. நசீம்தீன், பீ., ''தொல்காப்பிய உரையாசிரியர்களின் தருக்கயியற் புலமை: சொல்லதிகாரம்–இளம்பூரணம்'', *9ஆவது கருத்தரங்க ஆய்வுக் கோவை,* தொகுதி–2, இ.ப.த.ம., மதுரைப் பல்கலைக் கழகம், மதுரை, 1977. பக்.189, 194.

99. நாச்சிமுத்து, கி., ''உரையாசிரியர்களின் தருக்கநெறி உரை விளக்கமும் பழங்கால நூலமைப்பு முறைகளும்'', *9ஆவது கருத்தரங்க ஆய்வுக் கோவை,* தொகுதி–2, இ.ப.த.ம., மதுரைப் பல்கலைக் கழகம், மதுரை, 1977, பக். 215 – 220.

100. நிர்மல் செல்வமணி, *தமிழ்க்காட்சி நெறியியல்,* உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1996.

101. நெடுஞ்செழியன், க., *தமிழிலக்கியத்தில் உலகாய்தம்,* பாரி நிலையம், 184, பிரகாசம் சாலை, சென்னை, 1990.

102. பிலோமினாள்,சி. ''தொல்காப்பிய உரையாசிரியர்களின் தருக்கநெறி உரை விளக்கம்–சொல்லதிகாரம்–கல்லாடனாரது உரை'', *9ஆவது கருத்தரங்க ஆய்வுக் கோவை,* தொகுதி–2, இ.ப.த.ம., மதுரைப் பல்கலைக் கழகம், மதுரை, 1977, பக்.244 – 248.

103. முத்தரசு, ந., ''தொல்காப்பிய உரையாசிரியர்களின் தருக்கநெறி உரை விளக்கம்– தெய்வச்சிலையாரின் சொல்லதிகார உரை'', *9ஆவது கருத்தரங்க ஆய்வுக் கோவை, தொகுதி–2,* இ.ப.த.ம., மதுரைப் பல்கலைக்கழகம், மதுரை,1977, பக்.277 – 282.

104. முருகவேள், ந.ரா., *தருக்க இயல் விளக்கம்,* பாரி நிலையம். சென்னை, 1960.

105. மோகன், இரா., *உரை மரபுகள்,* மணிவாசகர் பதிப்பகம், சொக்கலிங்கம், ந., 55இ, லிங்கிச் செட்டித் தெரு, சென்னை, 1988. நெல்லை.

106. விசயலக்குமி, அ.,''தொல்காப்பிய உரையாசிரியர்களின் தருக்கநெறி உரை விளக்கம்–தொல்–சொல்லதிகாரம் நச்சினார்க்கினியர் உரை'', *9ஆவது கருத்தரங்க ஆய்வுக் கோவை,* தொகுதி–2, இ.ப.த.ம., மதுரைப் பல்கலைக் கழகம், மதுரை, 1977, பக். 323 – 328.

107. வெள்ளைவாரணன், க., *தமிழ் இலக்கிய வரலாறு – தொல்காப்பியம்,* அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர், மூன்றாம் பதிப்பு, 1978.

108. வையாபுரிப்பிள்ளை, எஸ்., *தமிழ்ச் சுடர்மணிகள்,* பாரி நிலையம், 59, பிராட்வே சென்னை–1, மூன்றாம் பதிப்பு 1959.

109. ஜெயலட்சுமி, சு., ''தொல்காப்பிய உரையாசிரியர்களின் தருக்க நெறி உரைவிளக்கம் சொல்லதிகாரம்– சேனாவரையர் உரை'', *9ஆவது கருத்தரங்க ஆய்வுக் கோவை,* தொகுதி–2, இ.ப.த.ம., மதுரைப் பல்கலைக் கழகம், மதுரை,1977, பக்.352–356.

## ஆய்வேடுகள்

110. சத்தியமூர்த்தி, ம., *தொல்காப்பிய மரபியல்–ஓர் ஆய்வு,* (இளம் முனைவர் பட்ட ஆய்வேடு), சென்னைப் பல்கலைக் கழகம், 1979.

111. சுமதி, இரா., *எழுத்ததிகாரத்தில் மாட்டேறு உத்திகள்,* (முதுகலைத் திட்ட ஆய்வேடு), புதுவைப் பல்கலைக் கழகம், புதுச்சேரி, ஏப்ரல்–2003.

112. தமிழரசி, இரா., *சங்க இலக்கிய உத்திகள் (பாட்டும் தொகையும்)* (முனைவர் பட்ட ஆய்வேடு), சென்னைப் பல்கலைக் கழகம், 1982.

113. திருமாவளவன், இராச., *"பழந்தமிழரின் அறிவாய்வியல் கருத்துகள்",* (முனைவர் பட்ட ஆய்வேடு), புதுவைப் பல்கலைக் கழகம், புதுச்சேரி, செப்டம்பர், 1994.

## ஆங்கில நூல்களும் பிற நூல்களும்

114. Satish Chandra, *A History of Indian Logic,* Motilal Vidyabhusana, Banarsidass Delhi, Reprinted, 1988.

115. *கௌடலீயம், பொருணூல்,* மு. கதிரேசச் செட்டியார் (மொ.பெ.ஆ.), தமிழ்மொழி பெயர்ப்பு, (1–3 அதிகாரங்கள்), இரண்டாம் பகுதி. பி.ஸ்ரீ. இராமானுஜாசாரி (மொ.பெ.ஆ.), (4–15 அதிகாரங்கள்) அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர், 1980.

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

தரமணி, சென்னை - 600 113

## அண்மை வெளியீடுகள்

| | | ரூ. பை. |
|---|---|---|
| 1. | சிலப்பதிகார இலக்கியக் கட்டமைப்பு | 160.00 |
| 2. | பழந்தமிழரின் பழக்க வழக்கங்கள் | 55.00 |
| 3. | பேரறிஞர் அண்ணாவின் சமூகப் பொருளாதாரச் சிந்தனைகள் | 75.00 |
| 4. | தமிழ்ச் செவ்வியல் நூல்களில் அறம், அறிவியல், சமூகம் | 70.00 |
| 5. | கிறித்தவக் காப்பியங்கள் | 225.00 |
| 6. | தமிழ் நாளிதழ்களின் மொழிநடை | 70.00 |
| 7. | சுயமரியாதை இயக்க வீராங்கனைகள் அன்றும் இன்றும் | 50.00 |
| 8. | குலோத்துங்கனின் கவிதை வளம் | 60.00 |
| 9. | தமிழ்த்தூது (கட்டுரைக் கொத்து) | 40.00 |
| 10. | தனிநாயக அடிகளாரின் ஆய்வுகள் | 50.00 |
| 11. | அறிவியல் பார்வையில் வேதாத்திரிய உடல்நலக் கொள்கைகள் | 60.00 |
| 12. | பழங்குடி மாணவர்களுக்கான தமிழ்மொழிப் பாடநூல் மதிப்பீடு | 65.00 |
| 13. | பதினெண் கீழ்க்கணக்கு நூல்களும் மனிதவள மேம்பாடும் | 50.00 |
| 14. | மேலைநாட்டறிஞர்களின் தமிழ்த் தொண்டு | 175.00 |
| 15. | பெரியார் என்னும் பேரொளி | 60.00 |
| 16. | சீனக்கவிஞர் குமோரோவின் தேவதைகள் (கவிதைத் தொகுப்பு) | 70.00 |
| 17. | புலம்பெயர்ந்தோர் படைப்புகளில் செவ்வியல் இலக்கியங்களின் தாக்கம் | 100.00 |
| 18. | உலகத் தமிழியல் ஆய்வுகள் (தொகுதி 1) | 450.00 |
| 19. | செவ்விலக்கியச் சாரம் | 70.00 |
| 20. | திருமந்திரம் காட்டும் வாழ்வியல் நெறிகள் | 165.00 |

வெ.எண் : 763

தொல்காப்பிய உத்திகள்

விலை : ₹ 60.00

